பெண்மை.
மதிமயக்கும்,
மலைப்பூட்டும்,
மனம் வாட்டும்,
மகிழ்வூட்டும்
பெண்மையின்
பத்துவித
சித்தங்களைப்
படித்தறிந்த
படைப்பு
‘மெஃபரின்’




# மெஃப்ரின்

மெஃப்ரின் சேலை அணிபவள்
மங்கையர்க்கரசியாவாள்,
உண்மையிலே அது முழு
நிலவாய்த் தழுவும் மோகன
கனவே. மென்மையிலே
தென்றல் இழைநெய்த துகிலே,
விண்முகிலே.

மெஃப்ரின் 100% பாலியெஸ்டர்
சேலைகள், பாலியெஸ்டர் இழை
கலந்த காட்டன் சேலைகள்;
பாலியெஸ்டர் இழை கலந்த
உடுப்புத் துணிகள்—இலேசான
லான்கள், கோடை நிழல் படரும்
கேம்ப்ரிக்குகள், கோலாகல
நகை மினிரும் பாப்ளின்கள்.

தவிர : அதி நவீனமான அரும்
பெரும் அழகு வண்ணங்களிலும்,
பிரிண்டுகளிலும் ‘டெரோசெல்’
பாலியெஸ்டர் இழை கலந்த
காட்டன் ஷர்ட்டிங்குகள்;
இன்னெளி மிளிரும்
வண்ணங்களிலே, வரிகளிலே,
கட்டங்களிலே ‘எஸ்டர்காட்’
பாலியெஸ்டர் இழை கலந்த
காட்டன் சூட்டிங்குகள்.

**மபத்லால்
க்ரூப்**

AIYARS-M.167 TM

அழகாய் கனிந்த அன்னாசிப்
பழங்களை ஆடைப்பாலில் கலந்து
அற்புதமாய் நான் வடித்த
அமுதச்சுவை. அதுதான்...

# நியூட்ரின்
## பைனாபிள் டாபி ரோல்



குழந்தைகளே! வாய் மணக்கும்
நற்சுவை தரும் நியூட்ரின்
பைனாப்பிள் டாபி ரோலை
நினைக்கும்போதே நாவில்
நீருறுகிறதல்லவா! இன்றே
வாங்கிச் சுவைத்திடுங்கள்!

NCM-24 TAM

**தின்னத்தின்ன**
**திகட்டாத மிட்டாய்!**




நியூட்ரின் கன்பெக்ஷனரி கம்பெனி
பிரைவேட் லிமிடெட், சித்தூர் (ஆ.பி.)

# அஜீரணம் என்றால் குழந்தை மீது எரிந்து விழுவானேன்?

ஹியூலெட்ஸ்
மிக்சர்
ஜீரணத்திற்குச்
சிறந்தது




அஜீரணத்தால் பாதிக்கப்பட்டால் உங்களுக்கு வயிற்றுப் பொருமலும், எரிச்சலும் ஏற்படுவது இயற்கை. குழந்தைகள் மீது எரிந்துவிழத் தோன்றும். தாய்மையின் அன்பு தணிந்து காணப்படும்.

ஹியூலெட்ஸ் மிக்சர் அருந்துங்கள். அது விரைவில் நிவாரணம் அளிக்கின்றது. வலியுண்டாக்கும் அமிலங்களைச் சமனப்படுத்தி ஜீரண உறுப்புக்கள் சரிவர இயங்குவதற்கேற்ப பாதுகாப்பு அளிக்கின்றது.

ஹியூலெட்ஸ் மிக்சர் குழந்தைகளின் வயிற்று உபாதைகளுக்கு நல்லது.

வயிற்றுப்போக்கு இருந்தால் அபினிசேர்ந்த ஹியூலெட்ஸ் மிக்சர் (கறுப்பு மூடி) குணமளிக்கும்.

C.J. ஹியூலெட் & ஸன் (இந்தியா)
பிரைவேட் லிமிடெட்
150A/2, மவுண்டு ரோடு, சென்னை 2

CJH-60991

# கல்கி

பொருளடக்கம்



விரோதிகிருது, ஆடி 16 -- ஆகஸ்டு 1, 1971







இலங்கைப் பிரமுகர் திரு ஆர். ஏ. நடேசன் அவர்கள் புதல்வி சௌபாக்கியவதி **கீதா**வுக்கும், திருச்சி அட்வகேட் திரு சி. சந்திரசேகர உடையார் அவர்களின் புதல்வன் சிரஞ்சீவி **சிவகுமார**னுக்கும் சென்னை, தியாகராயநகர், எஸ். ஜி. எஸ். ஹாலில் 5-7-71 அன்று அதிவிமரிசையாகத் திருமணம் நடைபெற்றது. முகூர்த்தத்துக்கு நண்பர்களும், உறவினர்களும், பிரமுகர்களும் ஏராளமாக வருகை தந்து சிறப்பித்தனர். அண்மையில் சென்னைக்கு விஜயம் செய்திருந்த பாரத ஜனாதிபதி திரு வி. வி. கிரி அவர்களை கவர்னர் மாளிகையில் சந்தித்துப் புதுமணத் தம்பதியர் நல்லாசியைப் பெற்றனர்.

வாழ்க மணமக்கள்!

# உங்கள் அனல்உலை சுட்ட கற்கள் காலதாமதமாக இயங்கினால் ஒவ்வொரு கணமும் பணம் விரயமாகும்

இதைவிட அதிமோசம் இது எப்பொழுது இயங்கத் தொடங்குமோ என்று தெரிந்து கொள்ள முடியாதது.

ஆனால் இந்தப் பிரச்னை உங்களைத் தீண்டாது. நீங்கள் உங்கள் தேவைகளை ஒரிஸ்ஸா சிமெண்டிடம் ஒப்படைத்து விட்டால், இதில் காலதாமதம் கிடையாது; எங்களிடம் சால்ஜாப்புகள் இல்லை. உங்களுக்குக் குறிப்பிட்ட காலத்தில் உங்கள் அனல்உலை கற்கள் வந்தடையும்.

நாங்கள் நீண்டகால ஆர்டர்களையும் ஏற்றுக் கொள்கிறோம்.
நீங்கள் எங்கள் டால்மியா அனல்உலை சுட்ட கற்களை வாங்கினால் அதன் தரம் நிச்சயம் உயர்தரமாக இருக்கும்.

GOWAN/OCL/7112



## ஒரிஸ்ஸா சிமெண்ட் லிமிடெட்

தொழிலகம் : ராஜ்கங்க்பூர், ஜில்லா, சுந்தர்கர், ஒரிஸ்ஸா
தலைமை அகம் : 4, சிந்தியா ஹவுஸ், புதுதில்லி-1



மலர் 31 ★ இதழ் 1

# ஞாயிறு போற்றுதும்

**ராஜாஜி**

மிகவும் முக்கியமான விஷயத்தைத் திரும்பத் திரும்பச் சொல்லுவதில் குற்றமில்லை. ஆனபடியால் காயத்ரீ மந்திரத்தைப் பற்றி மறுபடியும் எழுதுகிறேன். சுயம்பூ என்று சொல்லப்படும் பல மூர்த்திகளும் லிங்கங்களும் உண்டு. பக்தர்களுடைய பக்தியின் சக்தியினால் லிங்கம் சர்வேசுவரனே ஆகி விடுகிறது. எந்த விக்ரஹமும் பக்தனுடைய பக்தியினால் சர்வேசுவரனே ஆகி விடுகிறது. நேரே ஈசுவரனைக் கண்ணால் கண்டு பூஜை செய்வது போல் பக்தர்கள் மூர்த்திகளுக்கும் லிங்கங்களுக்கும் பூஜை செலுத்துகிறார்கள். விசுவாமித்திர முனிவர் தந்த காயத்ரீ மந்திரத்தின் விசேஷம் என்னவென்றால் பூஜை செலுத்தும் மூர்த்தி நிஸ்ஸந்தேக சுயம்பூமூர்த்தி. வானத்தில் தினமும் உதயமாகி, தினமும் மறைந்து மறுபடியும் உதயமாகும் ஆதித்ய மூர்த்தி புலனுக்குச் சிக்காத சர்வேசுவரனுடைய லிங்கம் ஆவான். மூர்த்திகளுக்குள் சிறந்து விளங்கும் சுயம்பூ மூர்த்தியாவான். அந்த ஜோதிக்கு காயத்ரீ மந்திரம் மூலம் பூஜை செய்கிறோம்.

சூரியன் வெறும் லிங்கம் மாத்திரம் அல்ல; சர்வேசுவரனிடமிருந்து அதிகாரம் பெற்ற பிரதிநிதியாவான். "ஞாயிறு போற்றுதும் ஞாயிறு போற்றுதும்" என்று இளங்கோவடிகள் பாடிய ஆதித்ய பகவான் இந்தப் பூமண்டலத்திலுள்ள எல்லா உயிர்களுக்கும் உயிரைத் தந்து, அன்னம் தந்து, மனோபலம் தேகபலம் ஆரோக்கியம் எல்லாம் தரும் ஈசுவரப் பிரதிநிதி.

பகவான் சூரிய நாராயணனைத் தினமும் வணங்குவோமாக! சமயம் வாய்த்தபோதெல்லாம் காயத்ரீ மந்திரத்தை மனத்தில் ஜபிப்போமாக, பொருள் அறிந்து ஜபிப்போமாக!

ॐ तत्सवितुर्वरेण्यं

भर्गो: देवस्य धीमही

धियोयो न: प्रचोदयात् ।

மந்திரத்தின் பொருள் என்னவென்றால், ஆதித்ய பகவானுடைய ஜோதியை உள்ளத்தில் அமைத்துக் கொண்டு தியானிப்போமாக. அந்த ஜோதி நம்முடைய எண்ணங்களை ஆள்வதாக; அதாவது பாப எண்ணங்கள் மனத்தில் இடம் பெறாமல் பகவான் ஆதித்தன் காப்பானாக.

# ராஜாஜியின் கருத்துக்கள்

கம்யூனிஸப் பரவலைத் தடுக்க வேண்டும் என்பதில் நிக்ஸன் தீரத்துடன் வெகு நாள் தம் நாட்டினருக்கு எதிர்முகம் கொடுத்துத் தான் வந்தார். ஆனால் பிறர் விஷயங்களில் ஈடுபடாமல் அமெரிக்கா ஒதுங்கித்தான் இருக்க வேண்டும் என்று பெரும்பான்மை அமெரிக்க மக்களும், ஆட்சி மன்றத்தின் இரு சபைகளும் பிடிவாதமாக இருந்து வந்துள்ளன. இந்த எதிர்ப்புக்கு ஏறக் குறைய அடிபணிந்து விடத் தீர்மானித்து விட்டார் நிக்ஸன்.

கம்யூனிஸம் பரவிக் கொண்டே வருகிற சமயத்தில் அமெரிக்கா செயலற்று இருக்க எண்ணுவது அவிவேகமான போக்காகும். மற்ற எல்லா விஷயங்களையும் விட்டு விட்டு, அமெரிக்கப் பண்டங்களுக்குச் சீனத்தில் மார்க்கெட் பிடிப்பதே முக்கியமான நோக்கமாகி விட்டதாகத் தோன்றுகிறது.

★

ஸ்தாபன காங்கிரஸ் தற்கொலைக்கு முடிவு செய்திருப்பதாகக் காண்கிறது. அரசியல் சாஸனத்தை உள்ளபடி காக்க வேண்டும் என்ற கருத்தை அது விட்டு விட்டது. மாறாக, சாஸனம் உறுதி கூறும் அடிப்படை உரிமைகளை நீக்கிவிட வேண்டும் என அது விரும்புகிறது. அதாவது இந்திரா காங்கிரஸை அது முற்றிலும் ஆதரிக்கிறது. இது ஆத்மஹத்தியே ஆகும்.

ஸ்தாபன காங்கிரஸானது ஆள்கிற கட்சிக்கு எதிராக உள்ள கட்சிகளின் கொள்கைகளை ஒழுங்குபடுத்தி ஒருமுகப்படுத்த வேண்டும் என விரும்புகிறோம். ஆனால் அதுவோ, 'இந்திரா கொள்கையேதான் எங்களுடையதும்' என்று ஒத்துப் பாடத் தீர்மானித்து விட்டது.

தலைவர்களின் சொந்தப் போட்டியை மட்டும் அடிப்படையாகக் கொண்டு கட்சிப் போராட்டங்கள் நடப்பதை இந்திய மக்களால் ரசிக்க முடியவில்லை. இப்போது அகில இந்திய ஸ்தாபன காங்கிரஸுக்கு எதிர்காலமே இல்லை எனத் தோன்றுகிறது. அது இருளில் திரிந்துவிட்டு அஸ்தமித்துப்போகும்.

ஆள்கிற கட்சிக்கு எதிராகவே இருப்போம் என்று ஸ்ரீ சாதிக் அலி அடித்துப் பேசியிருப்பதையும், ஆள்கிற கட்சியின் கொள்கைகளை அது அப்படியே ஏற்பதையும் மக்களால் இணைத்துப் பார்க்கவே இயலவில்லை.

கம்யூனிஸம் வந்துவிடக் கூடாது என்ற கருத்தில், மகாபுருஷர்கள் அரசியல் சாஸனத்தை வகுத்து நமக்கு ஒரு பெரிய பிதுரார்ஜித செல்வமாகத் தந்தனர். இந்தப் பெரியோர்களை ஸ்தாபன காங்கிரஸ் திரஸ்கரித்து விட்டது. சாஸனத்தின் மீது போர் தொடுக்கும் யதேச்சாதிகாரிகளிடமிருந்து அதைக் காப்பதற்குப் பதில், அவர்களுக்கு ஆதரவாகப் பலம் தந்து தானும் போராட்டத்தில் இறங்குவதென ஸ்தாபன காங்கிரஸ் முடிவு செய்திருக்கிறது. இன்று உயிரோடு இருந்து இதைக் காண்கிற எனக்கு ஏற்படும் வேதனை மகத்தானது.

★




பங்களா தேசத்திலிருந்து வருகிற ஒரு கோடி அகதிகளை இந்தியா கவனித்துக் கொள்ள வேண்டியிருக்கும் எனப் புனர்வாழ்வு மந்திரி ஸ்ரீ காடில்கர் கூறியிருக்கிறார். அதாவது, நிலைமை மிகவும் முற்றியிருக்கிறது. எனவே, இப்போது இந்திய அரசாங்கம் ஓர் அதிமுக்கியமான நடவடிக்கை எடுத்தாக வேண்டும். உணர்ச்சி வசப்பட்டவர்கள் பங்களா தேசத்தை அங்கீகரிப்பதே அதிமுக்கியமான நடவடிக்கை என எண்ணுவர். ஆனால் நான் அதைச் சொல்லவில்லை. பங்களா தேசத்தை அங்கீகரிப்பது நமது சுமையை அதிகரிக்குமே அன்றிக் குறைக்காது. நான் கூறும் அதிமுக்கியமான நடவடிக்கை கட்சிப் பற்றற்ற தேசிய சர்க்காரை நிறுவுவதே ஆகும். செயலற்

திருக்கும் வல்லரசுகளுக்கு நெருக்கடியை உணர்த்தி, அவற்றின் போக்கை மாற்ற இதுவே உதவும். இதனால் ஸ்ரீமதி இந்திரா காந்தியின் முக்கியத்துவமும் அந்தஸ்தும் ஓங்கும். நாம் எடுக்கக் கூடிய வேறெந்த நடவடிக்கையையும் விட, இதுவே சக்திகரமானது என்பதை ஸ்ரீமதி இந்திரா உணர வேண்டும். சிறிதும் காலம் கடத்தாமல், இதனைச் செய்ய வேண்டும். அதாவது முஜிப்–உர்–ரஹ்மானை எதிரிகள் தூக்கில் போட்டு விடுவதற்குமுன் இந்த நடவடிக்கை எடுக்க வேண்டும். பிரிவினை விரும்புவோருக்குத் தலைவரான முஜிப் – உர் – ரஹ்மானுடன் பாகிஸ்தான் ஆட்சித் தலைவர்கள் பேச்சுவார்த்தை நடத்துமாறு நாம் வல்லரசுகளைக் கொண்டு வற்புறுத்த வேண்டும். முஜிப்–உர் – ரஹ்மானுக்குத் தண்டனை விதிக்கப்பட்டு விட்டால் அதனால் உணர்ச்சி கிளர்ந்தெழும்; அதன்பின் பேச்சு வார்த்தைக்கே இடமில்லாமற் போகும்.







★

சென்னை நகரப் பள்ளிக்கூடங்களின் தலைமை ஆசிரியர்கள் மகாநாடு கூட்டி, ஆங்கில மீடியம் வகுப்புக்களை விரிவுபடுத்துவதற்கு அனுமதி வழங்குமாறு தமிழ்நாட்டு அரசாங்கத்தை வற்புறுத்தியுள்ளனர். இதுபோன்று தலைமை ஆசிரியர்கள் சர்க்காரிடம் அனுமதி கோர நேர்ந்திருப்பதே விசித்திரமாகும். மாணவர்கள், அவர்களது பெற்றோர், தலைமை ஆசிரியர்கள், கல்லூரித் தலைவர்கள் அனைவரும் ஆங்கில மீடியம் வகுப்புக்களையே ஆதரிக்கின்றனர். ஆயினும் பணத்தைக் கொண்டு எதையும் விலைக்கு வாங்கிவிட முடியும் என்ற கருத்தில், சர்க்கார், இப்போது ஆங்கில மீடியத்துக்கு எதிராக உபகாரச் சம்பளங்களை வழங்குகிறது.

★

கரு என்பது மூன்று மாதங்கள் ஆனவுடனேயே உயிர்வாழ உரிமை பெற்றுவிடுகிறது. அதன் பின் அதைத் தாய், அல்லது தந்தையின் சொத்தாகக் கொள்வதற்கில்லை. எனவே கருச் சிதைவு செய்வது கொலையே யாகும். வளர்ச்சி பெற்ற மனிதனைக் கொல்வதற்கும் இதற்கும் வித்தியாசம் இல்லை. உடல் உபாதையில் அவதி தாங்க முடியாதவர்களுக்கு மருந்து கொடுத்துக் கொல்வதைவிட, எதிராளியின் ஒப்புதலைப் பெற்றே அவனைக் கொல்வதைவிடக் கொடுமையானது, கருச் சிதைவுக்குச் சட்டபூர்வ ஆதரவு தருவது. ஏனெனில் இதில் கொலைக்கு ஆளாகும் உயிரின் ஒப்புதலை நாம் பெறவில்லை.

அமெரிக்காவில் ஸ்திரீ புருஷத் தொடர்புகளில் சம்பிரதாயக் கட்டுப்பாடுகளைத் தளர்த்தியதால் ஏற்பட்டுள்ள விபரீதங்களை அந்த நாட்டுச் சஞ்சிகைகள் விளக்குகின்றன. கருச் சிதைவைச் சட்டப்படி அங்கீகரிப்பதில் இவ்வித தார்மிகச் சிதைவும் உள்ளடங்கியதே. மக்கட் தொகையைக் கட்டுப்படுத்துவதற்காகக் கருச் சிதைவை அனுமதித்துச் சட்டம் போட்டுவிடலாம்; ஆனால் இதனால் ஏற்படக் கூடிய துர்நோய்களை எவ்விதத்திலும் கட்டுப்படுத்த முடியாது.

# அன்பார்ந்த நேயர்களுக்கு



அட்டையில் 'கல்கி'யின் காவல் தெய்வமான கணநாதனைக் கண்டவுடன் காரணத்தை ஊகித்திருப்பீர்கள். ஆம், 'கல்கி' முப்பது பிராயங்களைப் பூர்த்தி செய்து, முப்பத்தோராவது வயதில் பிரவேசிக்கிறது. வயது முப்பது ஆனாலும் இலக்கியத் தொண்டு மூப்பது என்பதில்லை. அது என்றும் இளமையாகவே, இனிமையாகவே, ஆற்றலுடன், அன்புடன், அழகுடன், அறிவுடன் மிளிர்ந்து வர ஆனைமுகன் அருள்பாலிப்பான்.

'கல்கி'யின் பிறந்த தினம் என்றவுடனே இயல்பாக என் நினைவு, இந்தப் பத்திரிகைக்குப் பெயர் தந்த ஸ்ரீ ரா. கிருஷ்ணமூர்த்தியையும், இதன் தோன்றாத்துணையான ஸ்ரீ டி.கே. சிதம்பரநாத முதலியார் அவர்களையும் சுற்றிப் படருகிறது. ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியின் எழுத்து வழியில் உருவான எண்ணற்ற எழுத்தாளர்களும், ஸ்ரீ டி. கே. சி.யின் ரசிக உணர்வை மார்க்கமாகக் கொண்ட இலக்கிய ஆய்வாளர்களும் வாரா வாரம் அவர்களை நினைப்பூட்டிக் கொண்டேதான் இருக்கிறார்கள். அவ்விருவருக்கும் மானசிக அஞ்சலிகளைச் செலுத்துகிறேன்.

பழைமையில் மேன்மேலும் வேர்விட்டு, உறுதியை உண்டாக்கிக் கொண்டு, புதுமையில் கிளை பரப்பிப் புது மலர்களைப் பூத்துச் சொரிவதே கல்கியின் குறிக்கோள். தொன்று தொட்ட நமது புராதன மரபை மறவாமல் காத்துத் தரும் பணியை 'கல்கி' விசேஷமாக ஏற்றிருக்கிறது. சநாதன பாரத தர்மம் யுக யுகாந்திரங்களாக அநுஷ்டித்து வந்துள்ள உயர் பண்புகள் அனைத்துக்கும் மூர்த்தியாக விளங்கும் ஜகத்குரு ஸ்ரீ காமகோடி பெரியவாளின் அருளுரைகளைப் பிரதிவாரமும் 'கல்கி' தாங்கி வருவதைப் பெரிய பாக்கியமாகக் கருதுகிறேன். பூரணத் தூய்மை வாய்ந்த அத்திரு உள்ளத்திலிருந்து பிறக்கும் பூரண வாசகங்களை நேயர்கள் நெஞ்சாழத்தில் பொதித்துக் கொள்வார்கள் என நம்புகிறேன். நடமாடும் தெய்வமாம் பெரியவாளைப் பத்திரிகையின் பிறந்த தினத்தில் பணிந்து, 'கல்கி' மேலும் மேலும் செழித்தோங்கி, நல்லறங்களை இயம்ப அருள்புரியுமாறு பிரார்த்திக்கிறேன்.

ஆரம்ப காலத்திலிருந்து அரசியல்—சமயம்—இலக்கியம் அனைத்திலும் 'கல்கி'க்கு ஜீவாதாரமாக இருந்து உயிர் ஊட்டி வரும் பூஜ்ய ராஜாஜியின் திருவடிகளை வணங்குகிறேன். அவரது தெய்வத் திருத் தொண்டுக்கு ஒரு கருவியாகக் கல்கிப் பத்திரிகையை அவர் உவந்தேற்றிருப்பது நம் பேரதிருஷ்டம். கல்கிக்கு அவரிடம் தீர்க்காயுள் வாழ்த்துக் கோரும் போதே, இறைவனிடம் அவருக்கும் நீண்ட ஆயுளைப் பிரார்த்திக்கிறேன்.

புதிய ஆண்டில் கல்கி தரவிருக்கும் புதுமைகளைக் கூறுகிறேன். பத்திரிகையில் வெளியாகும் விஷயத்தின் புதுமை ஒருபுறமிருக்க, பத்திரிகையின் அமைப்பிலேயே இன்னும் ஒரு சில வாரங்களில் புதுமை ஏற்படப் போகிறது. உங்கள் அபிமான கல்கி, கூடிய சீக்கிரத்தில் மிக உயர்ந்த ஆஃப்—ஸெட் ரோடரி யந்திரத்தில் அச்சாகி, நானு வண்ணங்கள் கொஞ்சும் அழகுக் கலைப்பொருளாக விளங்கப்போகிறது.

விஷயத்தை எடுத்துக் கொண்டால் நவீனங்களுக்குள் நவீனமான நவீனம் எனத்தக்க, 'சென்ட்ரல்' தொடர்கதை அடுத்த இதழிலிருந்தே தொடங்குகிறது.

கல்கி வெள்ளி விழா நாவல் போட்டியில் பரிசு பெற்றவரான ஸ்ரீ பி. வி. ஆர். 'சென்ட்ரல்' என்ற இந்த நாவலுக்கென சென்ட்ரல் ஸ்டேஷனைப் பல மாதங்கள் ஆராய்ந்தார். அதன் கடிகாரக் கூண்டு முதல் 'ஷண்டிங் யார்டு' வரை பல இடங்களையும் துருவிப் பார்த்தார். அங்கே எத்தனையோவிதமான பயணிகள் வருவதும் போவதுமாக இருப்பது ஒருபுறமிருக்க, அந்தக் கட்டடத்துக்குள்தான் எத்தனைவிதமான அலுவல்களில் எத்தனை எத்தனை பேர்கள் ஈடுபட்டிருக்கிறார்கள்! ஒருவரையும் விட்டு வைக்கவில்லை பி. வி. ஆர். ஸ்டேஷன் ஸுப்பிரண்டெண்ட் முதல் போர்ட்டர் வரை சகலமான பேர்களுடனும் பழகினார். சென்ட்ரலில் வேறு பல ரக ஆசாமிகளும் உண்டு. பிளாட்பாரத்தையே குடியிருப்பாக்கிக் கொண்டவர்கள்; பிக்பாக்கெட் கேடிகள் போன்றோர் பற்றியும் அறிந்து கொண்டார் பி. வி. ஆர்.

இந்த ஆராய்ச்சிகள், உரையாடல்களின் விளைவாகப் பிறந்தது ''சென்ட்ரல்''.

குடத்துள் விளக்காக, அரும் செயல் செய்தும் அதன் பெருமையை உலகறியாதவர்களாகப் பலர் இருப்பார்கள். இந்தக் குடத்து விளக்குகளைக் குன்றின் மேலிட்ட தீபமாக்கக் 'கல்கி' முன்வருகிறது. உங்களுக்குப் பழக்கமான ஒருவர் இவ்விதம் பாராட்டுக்குரியவர் எனத் தோன்றினால் அவரது அருஞ்செயலைக் 'கல்கி'க்கு எழுதி அனுப்புங்கள். தேர்ந்தெடுத்துப் பிரசுரிக்கிறோம்.

தமிழகத்தைப் பொறுத்தமட்டில் அநேகமாகக் குடத்து விளக்காக உள்ள ஒரு ஞான தீபத்தையும் குன்றிலேற்ற இருக்கிறோம். புனித அன்னை ஸ்ரீ சாரதாமணி தேவியை பகவான் ராமகிருஷ்ண பரமஹம்ஸரின் பத்தினி என்றும், பதியின் அரிய சீடர் என்றும் நேயர்கள் அறிவீர்கள். ஆனால் அவரது எளிய, உயரிய, வாழ்க்கைச் சரித்திரத்தைப் பெரும்பாலோர் அறிந்திருக்க மாட்டார்கள். உபநிஷதம் — பிரம்ம சூத்திரம் — பகவத்கீதை இம்மூன்றையும் தமிழ்த்து சமயத்தின் 'பிரஸ்தான த்ரயம்' என்பர். இவ்வாறே நவயுகத்தில், ஸ்ரீ ராமகிருஷ்ணர் — விவேகாநந்தர்— சாரதா தேவி இவர்களது ஜீவிய சரிதங்களைப் 'பிரஸ்தான த்ரயம்' எனலாம். முன்பே 'கல்கி'யில் ராமகிருஷ்ண, விவேகாநந்த சரிதங்களை எழுதிய ஸ்ரீ ரா. கணபதி அடுத்த சில வாரங்களில் ஸ்ரீ சாரதையின் சரிதையையும் தொடராக எழுதிப் பிரஸ்தான த்ரயத்தைப் பூர்த்தி செய்யவிருக்கிறார். இன்று பெண் குலம் போகும் போக்கில் அவசியம் படித்து, பயன்பெற வேண்டிய சரிதம், புனித சாரதையின் வரலாறு.

இலக்கியத் தெய்வமான ஆதி சாரதையை வணங்கி, உங்களின் நல்வாழ்த்தைக் கோருகிறேன்.

சதாசிவம்

# மகுடபதி




## பதினேழாம் அத்தியாயம்
## மோட்டார் விபத்து

மகுடபதிக்கும் பங்கஜத்துக்கும் மேலே நடந்த சம்பாஷணையைச் சொல்வதற்கு முன்னால் காலப் போக்கில் கொஞ்சம் பின்னோக்கிச் சென்று, மகுடபதியை லாக்-அப்பில் அடைத்ததிலிருந்து அவனுக்கு நேர்ந்தவைகளைத் தெரிந்து கொள்ள வேண்டும்.

போலீஸ் லாக்-அப்பிலிருந்து மகுடபதியை ஸப்-ஜெயிலுக்குக் கொண்டு போய் ஒரு தனி அறையில் அடைத்தார்கள். ஏற்கனவே இரண்டு முறை —ஒரு வாரமும் பத்து நாட்களும்— அவன் ஸப்- ஜெயிலில் இருந்திருக்கிறான். ஆனால் இந்தத் தடவை அவன் ஸப்-ஜெயிலிலிருந்த மூன்று நாட்களும் அவனுக்கு மூன்று யுகங்களாகத் தோன்றின. அவன் உள்ளம் எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணிற்று. தேசத்தில் மகத்தான இயக்கம் ஆரம்பமாகி நடந்து கொண்டிருந்தது. அந்த ஜில்லாவில் அவனுடைய முக்கியமான காங்கிரஸ் சகாக்களெல்லாம் சிறைக்குப் போய் விட்டார்கள். அநேக தொண்டர்கள் அடிபட்டு ஆஸ்பத்திரியில் கிடந்தார்கள். இப்படிப்பட்ட இயக்கத்தில் தான் பங்கு எடுத்துக் கொள்ள முடியவில்லை. ஏதோ ஒரு பொய்க் கேஸில் அகப்பட்டு சப்-ஜெயிலில் கிடக்க வேண்டியதாயிருக்கிறது. தன் மேல் என்ன கேஸ் போடப் போகிறார்கள் என்ற விவரம் இன்னும் அவனுக்குத் தெரிந்தபாடில்லை. போலீஸ் அதிகாரிகள் — முக்கியமாக ஸப்-இன்ஸ்பெக்டர் சங்கடஹரி ராவ் —என்ன சூழ்ச்சி செய்து கொண்டிருக்கிறாரோ, தெரியாது. அவர் மட்டுந்தான் சூழ்ச்சி செய்கிறாரோ, அல்லது கார்கோடக் கவுண்டரும் சேர்ந்து இரண்டு பேருமாய்ச் சேர்ந்து சூழ்ச்சி செய்து கொண்டிருக்கிறார்களோ? ஏதாவது கள்ளுக் கடையைக் கொளுத்தியதாக ஒரு பொய்க் கேஸைத் தன்பேரில் அவர்கள் போட்டு வைத்தால் என்ன செய்வது? அதற்கு வேண்டிய பொய்ச் சாட்சிகளைத் தயாரித்துத் தண்டனையும் வாங்கிக் கொடுத்து விடுவது அவர்களுக்குக் கஷ்டமாயிராது. அப்படிப்பட்ட பலாத்காரக் கேஸில் தான் தண்டனையடைந்தால் காங்கிரஸ் இயக்கத்துக்கே அதனால் மாசு ஏற்பட்டு விடுமல்லவா? அத்தகைய கேஸ் நேர்ந்தால் எதிர் வழக்காடுவதா, அல்லது சும்மா இருந்து விடுவதா? யோசனை கேட்பதற்குக்கூட முக்கியமான காங்கிரஸ் தலைவர்கள் யாரும் இல்லை; எல்லாரும் முன்னமே சிறைக்குப் போய்விட்டார்கள்; இன்னும் வெளியில் இருக்கும் இரண்டொருவரைச் சந்தித்துப் பேசுவதற்கும் வசதி கிடையாது.

"ஐயோ! அன்றைக்கு நாம் கோயமுத்தூருக்கு என்னத்திற்காக வந்தோம்? நம்மூரிலேயே ஏதாவது மறியல் நடத்திப் பேசாமல் சிறை புகுந்திருக்கக் கூடாதா?" என்று எண்ணி மகுடபதி பெருமூச்சு விட்டான். அன்று தான் கோயமுத்தூருக்கு வந்ததனால் என்னென்ன விபரீதங்கள் ஏற்பட்டுவிட்டன? தனக்கு மட்டுமா கஷ்டம்? செந்திருவுக்கும் பெரியண்ணனுக்கும் அல்லவா பெரும் விபத்துக்கள் நேர்ந்து விட்டன?

செந்திருவைப் பற்றி நினைக்கும்போதே அவனுடைய நெஞ்சு சொல்ல முடியாத வேதனை அடைந்தது. அவளுடைய கதி என்ன ஆயிற்றோ? பலவந்தமாய்க் கார்க்கோடக் கவுண்டருக்குக் கல்யாணம் செய்து வைத்திருப்பார்களோ? ஒரு வேளை, அவள் உயிரை விட்டிருப்பாளோ? — பாவிகள் ரொம்பவும் அவளை இம்சித்திருப்பார்களோ? "ஐயோ! நம்மை நம்பிய அந்த அபலைப் பெண்ணுக்கு நம்மால் அனுகூலமில்லா விட்டாலும் ஆபத்தல்லவா அதிகமாகி விட்டது?" என்று எண்ணியபோது மகுடபதியின் இதயம் துடித்தது. ஆம்; அன்றிரவு, தான் அந்த வீட்டில் ஒளிந்திருந்து திடீரென்று வெளியே வந்ததனால், செந்திருவின் மேல் அந்தக் கவுண்டர்களுக்கு இல்லாத பொல்லாத சந்தேகங்கள் உண்டாகி யிருக்குமல்லவா?

செந்திருவுக்கு மட்டும் ஏதாவது தீங்கு நேர்ந்திருந்தால் அதற்குக் காரணமா யிருந்தவர்கள் மேல் பழிக்குப் பழி வாங்கியே தீருவதென்று மகுடபதி சங்கல்பம் செய்து கொண்டான்.

கார்க்கோடக் கவுண்டர் அவன் மனக் கண்ணின் முன்னால் தோன்றும் போதெல்லாம் அவனுடைய இரத்தம் கொதித்தது; நரம்புகள் எல்லாம் புடைத்து எழுந்தன. "அஹிம்ஸையாவது ஒன்றாவது? வெறும் பைத்தியக்காரத்தனம். இப்படிப்பட்ட பாதகர்களை எந்த விதத்திலாவது யமலோகத்துக்கு அனுப்பினால் அதுவே பெரிய புண்ணியச் செயலாகும்" என்று அடிக்கடி எண்ணமிட்டான்.

பெரியண்ணன் மீது கார்க்கோடக் கவுண்டரின் கத்தி பாய்ந்த காட்சி அடிக்கடி அவன் மனக் கண் முன் வந்து கார்க்கோடக் கவுண்டரின் மேல் அவனுக்கு இருந்த கோபத் தீயை இன்னும் தூண்டிவிட்டு ஜ்வலிக்கச் செய்தது. பெரியண்ணனுடைய கதி என்னவாயிருக்கும்? தானே எழுந்து போயிருப்பானோ? அல்லது கவுண்டர்கள் வந்துதான் அப்புறப்படுத்தி யிருப்பார்களோ? அல்லது இந்தப் பாதக உலகை விட்டுப் போய்விட்டானோ?

மூன்று தினங்கள் வரையில் இவ்விதம் அவன் உள்ளம் கொந்தளித்துக் கொண்டிருந்தது. இன்னும் சில தினங்கள் இப்படியே தன்னைத் தனி அறையில் போட்டிருந்தால் ஒருவேளை பைத்தியம் பிடித்து விடுமோ என்றுகூட அவனுக்குத் தோன்றத் தொடங்கியது. ஐயோ! அப்படி ஏதாவது நேர்ந்து விட்டால் செந்திருவின் கதி என்ன? — இந்த எண்ணம் தோன்றியபோது, விரிந்து மலர்ந்த கண்களில் நீர்த் துளிகளுடன் கூடச் செந்திருவின் சோகம் ததும்பும் முகம் அவன் மனக் கண் முன் வரும். அப்போது





அவனுடைய நெஞ்சு வெந்து போவது போல் இருக்கும். இந்தத் துயர நினைவை மறப்பதற்காக மருடபதி காங்கிரஸ் இயக்கத்தையும் காந்தி மகானையும் தேசியப் போரின் மற்ற அம்சங்களையும் பற்றிச் சிந்திக்க முயன்றான்.

மூன்றாம் நாள் பிற்பகலில் மருடபதி இத்தகைய சிந்தனைகளில் ஈடுபட்டிருந்த போது திடீரென்று சில போலீஸ் சேவகர்கள் வந்து அவனை அடைத்து வைத்திருந்த கொட்டடிக்கு முன்னால் நின்றார்கள். கதவு திறக்கப்பட்டது. அவர்களுடைய உத்தரவுப்படி மருடபதி வெளியேறினான். வாசலில் போலீஸ் வண்டி காத்துக் கொண்டிருந்தது. அதற்குள் ஏற்கனவே நாலைந்து காங்கிரஸ் தொண்டர்கள் இருந்தார்கள். மருடபதியும் அதற்குள் ஏற்றப்பட்டான். போலீஸ் சேவகர்களும் ஏறி உட்கார்ந்ததும் வண்டி புறப்பட்டது.

எல்லோரையும் கோர்ட்டுக்குத்தான் அழைத்துப் போகிறார்கள் என்று மருடபதி நினைத்தான். வண்டியில் ஏற்கனவே இருந்த தொண்டர்களில் ஒருவரையும் மருடபதிக்குத் தெரியாது. அவர்கள் எல்லாம் ''மகாத்மா காந்திக்கு ஜே!''

''வந்தே மாதரம்!'' என்று உரத்த குரலில் கோஷமிட்டார்கள். மருடபதிக்கு இந்தக் கோஷத்தில் கலந்து கொள்வதற்கு வேண்டிய உற்சாகம் இல்லை. ஆகையால் மௌனமாக இருந்தான். தொண்டர்களின் கோஷத்தினால் கலவரப்பட்டு வீதியில் போய்க் கொண்டிருந்த ஜனங்கள் போலீஸ் வண்டியை நோக்கினார்கள். அவர்களில் யாராவது தனக்குத் தெரிந்தவர்கள் இருக்கிறார்களா, இருந்தால் சமிக்ஞையினால் செய்தி தெரிவிக்கலாம் என்று மருடபதி ஆவலுடன் வண்டிக் கம்பிகளின் வழியாகப் பார்த்துக்கொண்டே போனான். ஒருவரும் அவனுக்குத் தெரிந்தவர்களாக எதிர்ப்படவில்லை எதிர்ப்பட்டாலும் இரும்பு வலைக் கூண்டுபோல் அமைந்திருந்த போலீஸ் வண்டிக்குள்ளிருந்து அவனால் ஒன்றும் பேசியிருக்க முடியாது. வண்டி வேறு மிகவும் வேகமாய்ப் போய்க் கொண்டிருந்தது.

கோர்ட்டில் கொண்டு போய் நிறுத்தியதும், தன்பேரில் பொய்க் கேஸ் என்று கூச்சலிட்டு, அன்றிரவு நடந்த சம்பவங்களையும் சொல்லலாமா என்று மருடபதி யோசித்தான். அதனால் தெளிவாகச் சிந்தனை செய்ய முடியாவிட்டாலும், அதனால் பயன் விளையாது என்று தோன்றியது. முதலில், மற்ற தொண்டர்கள் தன்னை ஜெயிலுக்குப் பயந்தவன் என்று நினைத்துக் கொள்வார்கள். மற்றப்படி மாஜிஸ்டிரேட்டும் தான் சொல்வதைக் காது கொடுத்துக் கேட்க மாட்டார். கேஸுக்குச் சம்பந்தமில்லாத விஷயம் என்று சொல்லி, தான் பேசுவதற்கே இடம் கொடுக்க மாட்டார். கார்க்கோடக் கவுண்டர், மாஜிஸ்டிரேட்டையும் தன்னுடைய கைக்குள் போட்டுக் கொண்டிருக்கக் கூடுமல்லவா? ஏதாவது ஜாமீன் கேஸ் என்று தன்னை ஒரு வருஷம் சிறைக்குள் தள்ளிவிட்டால் செந்திருவின் நிலைமை என்ன? இப்படிக் கோர்ட்டில் என்ன சொல்வது என்பதைத் தீர்மானிக்க முடியாமல் மருடபதி தவித்துக்கொண்டிருந்தபோது, அந்தப் போலீஸ் மோட்டார் கோயமுத்தூர் நகரின் எல்லையைத் தாண்டிக் கொண்டிருப்பதை மருடபதி கவனித்தான்.

''இதென்ன? நம்மைக் கோர்ட்டுக்குக் கொண்டு போகவில்லையா? எங்கே கொண்டு போகிறார்கள்?'' என்று மருடபதி மற்றத் தொண்டர்களைப் பார்த்துக் கேட்டான். அவர்களில் ஒருவன், ''இது தெரியாதா உனக்கு? நம் பேரில் கேஸ் நடக்காதாம். கோயமுத்தூருக்கு வெளியே எங்கேயாவது தூரத்தில் கொண்டு போய் விட்டுவிடும்படி ஜில்லா மாஜிஸ்டிரேட்டின் உத்தரவாம்'' என்றான்.

இந்தச் செய்தியைக் கேட்டதும் மருடபதிக்குப் புத்துயிர் வந்தது போலிருந்தது. இன்னும் சிறிது நேரத்துக் கெல்லாம் தனக்கு விடுதலை கிடைத்து விடும் என்ற எண்ணம்

அவனுக்குக் குதூகலமே உண்டாக்கிற்று. போலீஸ் வண்டி அதி வேகமாகச் சென்றது போல், அவன் எண்ணங்களும் விரைந்து சென்றன. விடுதலை கிடைத்ததும் செந்திருவைத் தேடும் முயற்சியில்தான் ஈடுபட வேண்டும். அதை எப்படி ஆரம்பிப்பது? ஏன்? முதலில் மாஜி ஸப்-ஜட்ஜ் அய்யாசாமி முதலியார் வீட்டுக்குத்தான் போக வேண்டும். முதலியார் எப்படிப்பட்டவரா யிருந்த போதிலும் அவருடைய பெண் — செந்திருவின் தோழி — தனக்கு ஒத்தாசை செய்யலாமல்லவா?

*　　*　　*

அதி வேகமாய்ப் போய்க்கொண்டிருந்த மோட்டார் வண்டி சட்டென்று சாலையில் நின்றது. மூன்று தொண்டர்கள் இறக்கி விடப்பட்டனர். அவர்கள் ''வந்தே மாதரம்'' என்று கோஷித்தார்கள். வண்டியிலிருந்தவர்கள் எதிரொலி செய்தார்கள். மறுபடியும் வண்டி கிளம்பித் துரிதமாய்ச் சென்றது. கால் மணி நேரம் போன பிறகு மீண்டும் நின்றது. இரண்டு தொண்டர்கள் இறக்கி விடப்பட்டார்கள். பிறகு வண்டியில் மகுடபதி ஒருவன்தான் இருந்தான்.

மகுடபதி பொறுமை இழந்து வண்டியிலிருந்து குதித்து விடலாமா என்ற நிலைமைக்கு வந்தபோது, வண்டியின் வேகம் குறைந்தது. ''இறங்கப்பா!'' என்றார் ஒரு போலீஸ் சேவகர். வண்டி சரியாக நிற்பதற்குள்ளாகவே, மகுடபதி இறங்கினான். இதனால் தள்ளாடிக் கீழே விழப் போனவன் மெதுவாகச் சமாளித்துக் கொண்டான்.

அவன் இறங்கியதும் போலீஸ் வண்டி அந்தச் சாலையை ஒரு பிரதட்சிணம் செய்து திரும்பி வந்த வழியே விர்ரென்று புறப்பட்டு அடுத்த நிமிஷம் அமோகமாய்க் கிளம்பிய சாலைப் புழுதியில் மறைந்து விட்டது.

அஸ்தமன சமயம். சூரியன் மேற்குத் திசையில் காணப்பட்ட மலைத்தொடர்களுக்குப் பின்னால் மறைந்து விட்டது. சாலை நிர்மானுஷ்யமாய் இருந்தது. கண்ணுக்கு எட்டிய தூரம் ஊரோ, வீடோ காணப்படவில்லை.

அந்த இடம் கோயமுத்தூரிலிருந்து சுமார் முப்பது மைல் இருக்கலாம். அவ்வளவு தூரம் எப்படி நடந்து போய்ச் சேர்வது? சாலையில் ஏதாவது பஸ் வந்தால் ஏறிக் கொள்ளலாம். இத்தனை நேரம் கழித்து பஸ் வருமா? — இம்மாதிரி யோசனை செய்து கொண்டு மகுடபதி



# வினோத சம்பிரதாயம்

திருநெல்வேலி மாவட்டத்தைய சம்பிரதாயம். இப்போது அநேகமாக மறைந்து வருகிறது. அந்தணக் குடும்பங்களில் கல்யாணம் நான்கு நாட்கள் ஜாம் ஜாம் என்று நடைபெறும். நான்காவது நாளன்று பெண் வீட்டினர் சம்பந்திகளை வழியனுப்பி வைப்பார்கள். அன்று மத்தியானம் சம்பந்திமார்களைப் பெண் வீட்டுக்கு அழைத்து விருந்தளிப்பார்கள். அன்று விருந்தில் தயிர் சாதத்துக்குப் பதில் பால் சோறு பரிமாறுவார்காள். சாப்பாடு முடிந்தபின் சம்பந்தி வீட்டாரின் கைகள், மார்பிலெல்லாம் தாராளமாகச் சந்தனம் பூசுவார்கள். 'நுகம்பா' என்று அழைக்கப்படும் செந்நிறக் குழம்பு ஒன்றை அவர்கள் ஆடைகளில் தெளிப்பார்கள். அவர்களுக்கு வாழைக்காய் மாலைகளைச் சூட்டுவார்கள். தலையில் வேப்பிலையைச் செருகுவார்கள். இத்தனை அலங்காரங்களுடன் 'பம்பை'க் கொட்டு (நையாண்டி மேளம் என்றும் சொல்வார்கள்) முழங்கச் சம்பந்திமார்களை, அவர்கள் தங்கியிருக்கும் வீட்டில் கொண்டு போய் விடுவார்கள். ஒரு சில கிராமங்களில் மட்டும் இன்றும் இச் சம்பிரதாயம் இருந்து வருகிறது.

தகவல்: ஆர். அனந்தராமகிருஷ்ணன்

சாலையோடு வந்து கொண்டிருந்தான். ஓரிடத்தில் சாலையில் முச்சந்தியும், கைகாட்டி மரமும் காணப்பட்டன. கோயமுத்தூர் சாலையில் அவன் திரும்பியதும் எதிரே ஒரு மோட்டார் வண்டி வருவதைக் கண்டான். ''எவ்வளவு வேகமாய் வருகிறது!'' என்று நினைத்துக்கொண்டே சாலையில் ஒதுப்புறமாக நகர்ந்தான். வண்டி கொஞ்சம் மெதுவாவது போல் தோன்றியது. கிட்ட நெருங்கியதும் அவனைச் சமீபித்து வந்தது. ''இதென்ன? நாம் இவ்வளவு ஒதுங்கியும் வண்டியை இப்படி விடுகிறானே?'' என்று நினைத்துக் கொண்டே இன்னும் ஒதுங்கினான். ஆனால் வண்டியும் ஒதுங்கி அவன் பக்கமே வந்தது. அடுத்த விநாடி வண்டி அவன் மேல் மோதிற்று. மகுடபதி நினைவிழந்து கீழே விழுந்தான். (தொடரும்)




# ஷாலிமார்

## ஃப்ருட் க்ரீம் மற்றும் ஆரஞ்சு க்ரீம் பிஸ்கட்டுகள்





இரண்டு மொரமொரப்பான ஷாலிமார் பிஸ்கட்டு களுக்கு இடையிலே க்ரீம் இருந்தால், சுவை எப்படியிருக்கும் என்று எண்ணிப் பாருங்கள்! ஷாலிமார் க்ரீம் பிஸ்கட்டுகளில்பல ரகம்—ஃப்ருட் க்ரீம், ஆரஞ்சு க்ரீம், ஏலக்காய் க்ரீம், குங்குமப்பூ க்ரீம் மற்றும் அன்னாசிப் பழ க்ரீம் அவை சுவையிலே ஒன்றை ஒன்று மிஞ்சுகின்றன! எல்லாமே வாங்கத் தோன்றும்.



*சுவைக்கென்றே*
*பிறந்தவை* **ஷாலிமார்** *பிஸ்கட் வகை!*

CMSB-24-202-Tam.

# சித்த சுத்திக்குச் சில சின்ன விஷயங்கள்

## ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி சங்கராச்சாரிய சுவாமிகள்

சித்த சுத்திக்குப் பயன்படுகிற சின்னச் சின்ன விஷயங்கள் பல உண்டு. இந்தச் சின்னச் சின்ன தர்மங்களை நம்முடைய பெரியவர்கள் தலைமுறை தத்துவமாக அநுசரித்து வந்தார்கள். அவர்கள் வாழ்க்கையில் திருப்தியும் சந்தோஷமும் நிறைந்திருந்தன. அவர்கள் எப்படி நடந்து கொண்டார்கள் என்று பார்த்து, அதை நாம் பின்பற்றினாலே போதும். புதிதாக ஒரு கொள்கையும் வேண்டாம். நாமும் சந்தோஷமாக, திருப்தியாக இருக்கலாம்.

பெரிய அத்யாத்ம விஷயங்களில் மட்டுமில்லாமல், ஒரு சமுதாயத்தில், ஒரு குடும்பத்தில் நடந்துகொள்ள வேண்டிய முறைகளில்கூட நமக்கு முன் வாழ்ந்த பெரியவர்கள் வழி காட்டியிருக்கிறார்கள். உதாரணமாக உறவு, சிநேகிதம் எல்லாம் அந்த நாளில் வெகு உயர்ந்த முறையில் காப்பாற்றப்பட்டன. ஒரு கலியாணம், அல்லது அபர காரியம் என்றால் பலர் ஒன்று சேர்ந்து செலவு செய்து நடத்திக் கொடுப்பது என்று வைத்துக் கொண்டிருந்தார்களே, அது எவ்வளவு உயர்ந்த பண்பு ?

இந்தக் காலத்தில் நடப்பது போல், 'டெமான்ஸ்ட்ரேஷ'னும், வெளிவேஷமும் அப்போது இல்லை. ஆனால் அந்த நாளில்தான் ஏழைகளுக்கு உண்மையாக உதவி செய்கிற பான்மை இயல்பாக அநுசரிக்கப்பட்டது. ஒரு கலியாணத்துக்குப் போகிறவர்கள் தங்களால் முடிந்ததை, ஐந்தோ, பத்தோ, உதவி செய்வது என்பதால் கலியாணம் செய்பவருக்கு எத்தனையோ பாரம் குறைந்தது.

ஒரு கூட்டத்திலே பலர் கொஞ்சம் கொஞ்சம் கொடுத்தாலும் போதும். கொடுக்கிறவர்களுக்குப் பெரிய சிரமம் ஏதும் இல்லை. ஆனால் வாங்குகிறவனுக்கு மொத்தத்தில் கணிசமாகக் கிடைக்கும். இப்படித்தான் ஓர் ஏழைக்குக் கஷ்டம், அவன் ஒரு கலியாணம் செய்ய வேண்டும், அல்லது அபர காரியம் செய்ய வேண்டும் என்றால் மற்றவர்கள் எல்லாரும் கொஞ்சம் கொஞ்சம் உதவி செய்து, அந்தக் காரியத்தை நடத்திக் கொடுத்து வந்தார்கள். முன்னாட்களில், பந்துக்களுக்குள் ஏழை, பணக்காரன் என்ற வித்தியாசம் அதிகம் இல்லை. பணக்காரனாக இருப்பவன் ஏழையான பந்துவுக்கே அதிக உதவி செய்வான். இதெல்லாம் தர்மத்தைச் சேர்ந்தது. சிரமத்தில் உள்ளவர்களுக்கு உதவி செய்வது சித்த சுத்திக்கே உதவும்.

ஆனால் இன்று எல்லாம் மாறி விட்டது. பழைய கால பந்துத்துவம் பணக்காரர்களுக்கு இல்லை. ஏழையான உறவினர்களுக்கு உதவுகிற மனப்பான்மை குறைந்து விட்டது. பழைய காலத்தில் நடந்தது உண்மையான அன்னதானம். இப்போது தனிகர்கள் தங்களைப் போன்ற பணக்காரர்களுக்காகவே பார்ட்டி - ஃபீஸ்ட்டு வைக்கிறார்கள். தேசத்தில் ஏராளமாக இப்படிப் பணமும் பண்டமும் செலவாகின்றன. இதில் தர்மத்துக்கோ, சித்த சுத்திக்கோ எதுவுமே இல்லை. இவன் காரியார்த்தமாகத்தான் ஒருத்தனைக் கூப்பிட்டு பார்ட்டியும், ஃபீஸ்ட்டும் வைக்கிறான். பார்ட்டி கொடுத்து, அதில் சாப்பிட்டவர்களை ஏமாற்றி விட்டதாக நினைக்கிறான். பார்ட்டி சாப்பிட்டவனுக்கும் தெரியும், 'இவன் பிரியத்தின் பேரில் தனக்குச் சாப்பாடு போடவில்லை, காரியத்துக்காகத்தான் சாப்பாடு போட்டான்' என்று. ஆனால் அதை வெளியே காட்டிக் கொள்ளாமல் சந்தோஷமாகச் சாப்பிட்டுவிட்டுப் போகிறான். ஆகையால், இவன் அவனைச் சாப்பாடு போட்டு ஏமாற்றுகிறான் என்றால், அவன் இவன் போட்டதைச் சாப்பிட்டு விட்டு இவனையே ஏமாற்றிப் போகிறான். ஆக, ஃபீஸ்டும், டோஸ்டும் ஏமாற்று வித்தையாகவே ஆகின்றனவேயன்றி சித்த சுத்திக்குப் பயன்படவில்லை.

ஏழைக்கு அன்னதானமோ பொருள் உதவியோ செய்யும் போது இரண்டு பக்கத்திலும் உண்மையான சந்தோஷமும், பிரியமுமே நிரம்பி யிருந்தன. இப்போது பார்ட்டி நடத்தும்போது அங்கே உண்மையான பிரியம் இல்லாததோடு, துவேஷம் வேறு உண்டாகிறது. வசதியிருப்பவர்கள் பார்ட்டி நடத்துவதைப் பார்த்து வசதியில்லாதவர்களுக்கு வெறுப்பும் துவேஷமும் உண்டாகின்றன. உறவு முறைகளில் ஏழை பணக்காரர் என்று வித்தியாசம் பாராட்டக் கூடாது என்பதற்காக இவ்வளவு சொன்னேன்.

'வசதியுள்ளவர்களால்தான் பண உதவி செய்து புண்ணியம் செய்ய இயலும், நாம் என்ன செய்யலாம்?' என்று மற்றவர்கள் எண்ணக் கூடாது. சரீரத்தால் மற்றவர்களுக்குக் கைங்கரியம் செய்வது பெரிய புண்ணியம். அது சித்த சுத்திக்கு மிக மிக உதவும். வசதியே இல்லாதவர்களும் இவ்விதத்தில் பிறருக்கு உதவி செய்ய முடியும்.

ஒவ்வொருத்தரும் — பிறருக்குக் கூடத் தெரிய வேண்டாம் — ஏதோ ஓர் ஒற்றையடிப் பாதைக்குப் போய் அங்கே உள்ள முள்ளை, கண்ணாடியை அப்புறப்படுத்தி வந்தால் போதும். அது சித்த சுத்திக்குப் பெரிய உதவி. இது மாதிரி சின்ன தர்மங்களை எவரும் செய்யலாம். பணக்காரர், ஏழை என்ற வித்தியாசமில்லாமல் ஒரு பேட்டையில் உள்ள அனைவரும் சேர்ந்து குளம் வெட்டலாம்.

'ஈசுவர அநுக்கிரகம் வேண்டும், வேண்டும்' என்றால் அது எப்படி வரும்? நல்ல காரியங்களைச் செய்து செய்து, மனசு பக்குவப்பட்டால்தான், சித்த சுத்தி உண்டாகி, அந்த சுத்தமான சித்தத்தில் ஈசுவரனின் உருவத்தைப் பார்க்க முடியும். கலங்கின ஜலத்தில் பிம்பம் தெரியாதது போல், நாம் மனசைக் கலக்கிக் கொண்டு ஈசுவர ஸ்வரூபம் தெரியாதபடி செய்து கொண்டிருக்கிறோம். பகவத் பக்தியும் பரோபகாரமும் செய்து மனசைத் தெளிவாக்கிக் கொண்டாலே ஈசுவரானுக்கிரகத்தை நாம் கிரகித்துக் கொள்ள முடியும்.



பொன்னியின் செல்வன்

அமரர் கல்கி

நாற்பத்தேழாம் அத்தியாயம்

## நந்தினியின் மறைவு!

ஓடி வந்த குதிரைகளைப் பார்த்து வியந்தவர்களில் முதலில் சுய உணர்வு பெற்றவன் ரவிதாஸன்தான்.

''தேவி! இந்தப் போலி வைஷ்ணவன் தன் வேலைத்தனத்தைக் காண்பித்து விட்டான். 'இவன் ஒற்றன், இவனை நம்ப வேண்டாம்' என்று எத்தனையோ தடவை தங்களுக்கு நான் எச்சரித்திருக்கிறேன். நம்மைப் பிடிப்பதற்கு இவன்தான் ஆட்களைக் கொண்டு வந்திருக்கிறான். ஆனால் இவனால் நம்மைப் பிடிக்க முடியாது. இவனுடைய தெய்வமாகிய நாராயணனே வந்தாலும் முடியாது. வாருங்கள், போகலாம். குதிரைகள் வருவதற்குள் மலைமேல் ஏறிவிடலாம்!'' என்றான் மந்திரவாதி.

ஆழ்வார்க்கடியான், ''நந்தினி! இந்தப் பாதகர்களுடன் நீ போகாதே! இவர்களுடன் நீ சேர்ந்ததினால் நேர்ந்த விபத்துக்கள் எல்லாம் போதும்!'' என்றான்.

நந்தினி ஆழ்வார்க்கடியானைப் பார்த்து, ''திருமலை! நான் வெகு நாட்களாக ஒன்று கேட்டுக் கொண்டிருந்தேன். அது நினைவு இருக்கிறதா? என் அன்னையிடம் அழைத்துப் போகும்படி உன்னை வேண்டிக் கொண்டிருந்தேன். இப்போதாவது என்னை நீ என் தாயிடம் அழைத்துப் போவதாக வாக்களித்தால் உன்னுடன் வருகிறேன். இல்லாவிடில் இவர்களுடன் போகிறேன்'' என்றாள்.

''நந்தினி! இனி என்னால் அது இயலாத காரியம்...!'' என்று திருமலை சொல்வதற்குள் ரவிதாஸன் குறுக்கிட்டு, ''இவன் என்ன அழைத்துப் போவது? நான் அழைத்துப் போகிறேன், வாருங்கள்!'' என்றான்.

''ஆமாம்; ஆமாம்! இவன் உன்னை உன் அன்னையிடம் யமலோகத்துக்கு அழைத்துப் போவான். உன் அன்னையைக் கொன்றது போல் உன்னையும் கொன்று யமலோகத்துக்கு அனுப்பி வைப்பான்! நந்தினி! இந்தப் பாதகர்களுடைய சகவாசம் இனியும் உனக்கு வேண்டாம். இவர்களில் ஒருவன் உன் தாயைக் கொன்றவன்! மந்திரவாதியின் முகத்தைப் பார்! கொலைகாரன் என்று எழுதி யிருக்கிறது!'' என்று சொன்னான் ஆழ்வார்க்கடியான்.

ரவிதாஸன் முகத்தில் கொந்தளித்த கோபத்துடன், ''பொய்! பொய்!'' என்று கத்தினான்.

சற்று முன் சாந்தம் குடி கொண்டிருந்த நந்தினியின் கண்களில் வெறியின் அறிகுறி காணப்பட்டது.

''திருமலை! இது உண்மையா? என் அன்னை உண்மையிலேயே இறந்துவிட்டாளா? அவளை இனி நான் பார்க்க முடியாதா?'' என்றாள்.

''சந்தேகமிருந்தால் இதோ இந்தப் பெண்ணைக் கேட்டுத் தெரிந்துகொள். இவர்களில் ஒருவனான சோமன் சாம்பவன்தான் வேல் எறிந்து உன் அன்னையைக் கொன்றவன். இவள் நேரில் பார்த்தாள். அத்தையைக் கொன்றவனைப் பின்தொடர்ந்து வந்தாள்! பூங்குழலி! சொல்!'' என்றான் ஆழ்வார்க்கடியான்.

''ஆமாம்! நானே என் கண்ணால் பார்த்தேன்! என் அத்தையைக் கொன்றவனைப் பழி வாங்கவே இங்கு வந்தேன்!'' என்றாள் பூங்குழலி.

நந்தினி பைத்தியம் பிடித்தவள் போல் வெறி கொண்ட சிரிப்புச் சிரித்தாள். ''பழி வாங்க வந்தாயா? பழி! பழி! நான் ஒருத்தி பழி வாங்கிய இலட்சணம் போதாதா?'' என்று சொல்லிவிட்டு, ரவிதாஸனைப் பார்த்து, ''துரோகி! சண்டாளா! இப்படியா செய்தாய்?'' என்றாள்.

''ராணி! நீ நினைப்பது தவறு! நான் ஒரு துரோகமும் செய்யவில்லை! சோமன்

சாம்பவன் சக்கரவர்த்தியின் மீது வேலை எறிந்தான். அந்த ஊமைப் பைத்தியக்காரி குறுக்கே விழுந்து செத்தாள். அவள் தலைவிதி! இப்போது நீ என்ன சொல்கிறாய்? எங்களுடன் வரப் போகிறாயா, இல்லையா? அதோ, குதிரைகள் நெருங்கி வந்து விட்டன!'' என்றான்.

அவனுடைய வார்த்தைகளை நந்தினி காதில் வாங்கிக் கொண்டதாகத் தோன்றவில்லை. திடீரென்று கீழே உட்கார்ந்து கொண்டாள். இரண்டு கண்களையும் இரண்டு கரங்களால் பொத்திக் கொண்டாள். அவள் உடம்பெல்லாம் குலுங்



கும்படி விம்மி அழுதாள். அழுகையுடன் வெறிச் சிரிப்பும் கலந்து வந்தது.

ரவிதாசன் தன் ஆட்களைப் பார்த்து, ''ஓடுங்கள்! ஓடிப்போய் மலையில் ஏறிக் கொள்ளுங்கள்! இனி ராணியை நம்புவதில் பயனில்லை!'' என்றான்.

எல்லோரும் ஓடினார்கள்.

ரவிதாசன், ''வைஷ்ணவனே! இந்தா உன் விஷமத்துக்குக் கூலி!'' என்று சொல்லிக் கையிலிருந்த தடியினால் வைஷ்ணவனின் தலையில் ஓர் அடி போட்டுவிட்டு ஓட்டம் எடுத்தான்.

ஆழ்வார்க்கடியான், ''நமோ நாராயணா!'' என்று சொல்லித் தலையை ஒரு முறை தடவிக் கொண்டான்.

ஓடியவர்கள் எல்லோரும் மலைக் குகைக்குள் நுழைந்தார்கள். சற்று நேரத்துக்கெல்லாம் குகைக்கு மேலே குன்றின் உச்சியில் காவேரி ஆறு அருவியாக மாறி விழும் இடத்தின் அருகே நின்றார்கள்.

அதே சமயத்தில் குதிரைகள் மலையடிவாரத்துக்கு வந்து சேர்ந்தன. சரியான வழி இல்லாமல் பெரிய பெரிய பாறைக் கற்கள் எங்கும் பரவிக் கிடந்தபடியால் குதிரைகள் வந்து சேருவதற்கு இத்தனை நேரம் பிடித்தது.

குதிரைகள் மீது வந்தவர்களில் முன்னால் வந்தவர்கள் சின்னப் பழுவேட்டரையரும் கந்தமாறனும்தான் என்பதை ஆழ்வார்க்கடியான் பார்த்துக் கொண்டான். அவர்களுக்குப் பின்னால் சேந்தன் அமுதன் ஒரு குதிரையின் மீது கயிற்றால் சேர்த்துக் கட்டப்பட்டு வருவதையும் பார்த்தான்.

''வாருங்கள்! வாருங்கள்! நல்ல சமயத்தில் வந்து சேர்ந்தீர்கள்!'' என்றான்.

சின்னப் பழுவேட்டரையரும் கந்தமாறனும் குதிரைகளின் மீதிருந்து கீழே குதித்தார்கள்.

கீழே உட்கார்ந்து விம்மிக் கொண்டிருந்த நந்தினியின் பேரில் முதலில் அவர்கள் கவனம் சென்றது.

கந்தமாறன் நந்தினியின் அருகில் சென்றான். ஏதோ சொல்லப் பிரயத்தனப்பட்டான். ஆனால் அவன் வாயிலிருந்து வார்த்தைகள் வரவில்லை.

சின்னப்பழுவேட்டரையர் ஆழ்வார்க்கடியானைப் பார்த்து, ''வைஷ்ணவனே! நீ எப்படி இங்கு வந்தாய்? எதற்காக வந்தாய்?'' என்று கேட்டார்.

''தளபதி! தாங்கள் யாரைத் தேடிக் கொண்டு வந்தீர்களோ, அவரைத் தேடிக்கொண்டுதான் நானும் வந்தேன். பெரிய பழுவேட்டரையர் அதோ அந்தக் குகைக்குள் இருக்கிறார்!'' என்றான்.

''நிஜமாகவா? உயிரோடு இருக்கிறாரா?'' என்று சின்னப் பழுவேட்டரையர் ஆவலோடு கேட்டார்.

''ஆமாம்; இன்னும் உயிரோடு இருக்கிறார். தங்கள் தமையனாரிடம் அணுகுவதற்கு யமனும் பயப்படுவான் அல்லவா? ஆகையால் அதோ அந்தக் கொலைகாரர்கள் செய்த முயற்சி தங்கள் தமையனார் விஷயத்தில் பலிக்கவில்லை!'' என்று சொல்லிவிட்டுத் திருமலை குன்றின் உச்சியில் நின்ற ரவிதாஸன் முதலியவர்களைச் சுட்டிக் காட்டினான்.

''அவர்கள் யார்? ஏன் அவர்களைக் கொலைகாரர்கள் என்று சொல்கிறாய்?''

''அவர்கள்தான் மந்திரவாதி ரவிதாஸனும் அவனுடைய கூட்டத்தாரும். வீர பாண்டியனுடைய ஆபத்துதவிப் படையைச் சேர்ந்தவர்கள். சக்கரவர்த்தியைக் கொல்ல முயன்றவர்கள் அவர்கள்தான்; இளவரசர் ஆதித்த கரிகாலரைக் கொன்ற பாவிகளும் அவர்களேதான்!'' என்றான் திருமலை.

கந்தமாறன் குறுக்கிட்டு, ''பொய்! பொய்! இளவரசரைக் கொன்றவன் வந்தியத் தேவன்! உன் சிநேகிதன் செய்த குற்றத்தை மறைக்கப் பார்க்கிறாயா?'' என்றான்.

''முட்டாளே! சும்மா இரு!'' என்று சின்னப் பழுவேட்டரையர் அவனை அதட்டினார். பின்னர் வைஷ்ணவனைப் பார்த்து, ''தனாதிகாரியையும் அவர்கள் கொல்லப் பார்த்தார்களா? எப்படித் தப்பினார்?'' என்று கேட்டார்.

''இதோ உட்கார்ந்து விம்மிக்கொண்டிருக்கும் பழுவூர் இளைய ராணியின் உதவியினால்தான் தப்பினார்!''

''ஏன் இளைய ராணி அழுதுகொண்டிருக்கிறார்?''

''அவருடைய அன்னை இறந்துவிட்டாள் என்று கேள்விப்பட்டார். அதனால் அழுகிறார்! இதெல்லாம் பிறகு விசாரித்துக் கொள்ளக் கூடாதா?''

''ஆம், ஆம்! பெரிய பழுவேட்டரையரை முதலில் பார்க்க வேண்டும். நீ போய் நான் வந்திருப்பதைச் சொல்லு!''

சின்னப் பழுவேட்டரையருக்குத் தம் தமையனாரிடம் உள்ள பயபக்தி அச்சமயம் கூடச் சிறிதும் குன்றவில்லை. ஆகையால் திடீரென்று தமையனாரைப் போய்ப் பார்க்க அவர் தயங்கினார்.

''ஐயா! தங்கள் தமையனார் இனி எங்கும் போய்விட மாட்டார். நான் போய்த் தாங்கள் வந்திருப்பதைச் சொல்கிறேன். அதோ அந்தக் கொலைகாரர்களைப் பிடிக்கத் தாங்கள் எதுவும் செய்யப் போவதில்லையா?''

சின்னப் பழுவேட்டரையர் தம் நெற்றியைக் கையினால் அழுத்திக்கொண்டு ''ஆம்! ஆம்! முன்னொரு சமயம் இப்படித்தான் என் புத்தி தவறி விட்டது! சக்கரவர்த்தியைக் கொல்ல முயன்றவனைத் தப்பி ஓடும்படி விட்டேன்!'' என்றார்.

''அவனும் தப்பிவிடவில்லை. அதோ அந்தக் குன்றின் மேலேதான் இருக்கிறான். உங்கள் ஆட்களுக்குச் சீக்கிரம் கட்டளை இடுங்கள்!''

உடனே தளபதி காலாந்தக கண்டர் தம்முடன் வந்த வீரர்களைப் பார்த்துக் கட்டளை பிறப்பித்தார். அவர்கள் குதிரைகள் மீதிருந்து இறங்கிக் காவேரி நதி குன்றின் மீதிருந்து அருவியாக விழும் இடத்துக்கு அருகில் போய்ச் சேர்ந்தார்கள்.

அவர்கள் அங்கே சேர்ந்ததும் மேலேயிருந்து பெரிய பெரிய உருண்டைக் கற்கள் கீழே விழ ஆரம்பித்தன. வீரர்கள் அந்தக் கற்கள் தங்கள் தலையில் விழாமல் தப்புவதற்காக அங்குமிங்கும் அவசரமாக நகர்ந்தார்கள். இரண்டொருவர் அக்கற்களினால் தாக்குண்டு கீழே விழுந்தார்கள்.

சின்னப் பழுவேட்டரையர், ''அவர்கள் எப்படி மேலே ஏறினார்கள் தெரியுமா?'' என்று கேட்டார்.

''குகைக்குள் புகுந்து ஏறினார்கள். குகையில் இரகசிய வழி இருப்பதாகத் தோன்றுகிறது. வாருங்கள், போய்ப் பார்க்கலாம்!'' என்று ஆழ்வார்க்கடியான் முதலில் சென்றான். காலாந்தககண்டரும் கந்தமாறனும் பின் தொடர்ந்தார்கள்.

குகைக்குள்ளேயிருந்து ஒரு நெடிய கம்பீரமான உருவம் தட்டுத் தடுமாறித் தள்ளாடிக் கொண்டு வெளியே வந்தது. குகை வாசலில் நின்று, நெருங்கி வருகிறவர்களை உற்றுப் பார்த்தது. தமையனாரை அடையாளம் கண்டு கொள்ளத் தம்பிக்குச் சிறிது நேரம் பிடித்தது.

உடம்பெல்லாம் காயங்களுடன், முகம் வெளுத்துப் பிரேதக் களை பெற்று நின்ற பெரிய பழுவேட்டரையரை அடையாளம் தெரிந்ததும், சின்னப் பழுவேட்டரையர், ''அண்ணா!'' என்று அலறிக் கொண்டு போய்ப் பெரிய பழுவேட்டரையரைக் கட்டிக் கொண்டார்.

அண்ணனின் கண்களிலிருந்து கண்ணீர் பெருகியது. அவருடைய வாய், ''தம்பி! நீ பல முறை எச்சரிக்கை செய்தாய்! அதைப் பொருட்படுத்தாமல் மோசம் போனேன்!'' என்று தழுதழுத்த மெல்லிய குரலில் முணுமுணுத்தது.

அச் சமயம் ஆழ்வார்க்கடியானும் கந்தமாறனும் குகைக்குள் பிரவேசிக்க யத்தனித்தார்கள்.

பெரிய பழுவேட்டரையர் அவர்களைத் தடுத்து நிறுத்தி, ''எங்கே போகிறீர்கள்?'' என்று கேட்டார்.

''கொலைகாரர்கள் இந்தக் குகைக்குள்ளே புகுந்தார்கள்....''

''எந்தக் கொலைகாரர்கள்?''

''மந்திரவாதி ரவிதாஸனும் அவனுடைய கூட்டாளிகளும்.''

''அவர்கள் கொலைகாரர்கள் அல்ல'' என்றார் பெரிய பழுவேட்டரையர்.

''பார்த்தீர்களா? வந்தியத்தேவன்தான் கொலைகாரன் என்று நான் சொல்லவில்லையா?'' என்றான் கந்தமாறன்.

பெரிய பழுவேட்டரையர் அவனை உற்றுப் பார்த்துவிட்டு, ''இந்த முட்டாள் வாலிபன் எப்படி இங்கே வந்து சேர்ந்தான்?'' என்றார்.

## நூலின்றித் தைக்கலாம்!

ஊசி, நூல் இல்லாமலேயே தைக்கும் யந்திரம் ஒன்று கண்டு பிடிக்கப்பட்டுள்ளது அமெரிக்காவில். சப்த அலைகளால் இயங்கும் இந்தத் தையல் யந்திரம் தைக்க வேண்டிய இரண்டு துணிகளையும் சேர்த்து 'வெல்ட்' செய்து விடுகிறது. ஆனால் 'தையல்' கோடு தெரியும். நூலைக் கொண்டு தைப்பதைவிட இது உறுதியானது. இந்த இயந்திரத்தில் செவிப்புலன்களுக்கு எட்டாத அளவுக்கு வேகத்தில் சப்த அலைகள் எழுவதால் இவ்வாறு தைப்பது சாத்தியமாகிறது.



'நியூஸ் வீக்'  'நாயக்.'

''கந்தமாறன்தான் கடம்பூரிலிருந்து செய்தி கொண்டு வந்தான்.''

''என்ன செய்தி?''

''இளவரசர் கரிகாலர் இறந்துவிட்ட செய்தியைக் கொண்டு வந்தான். நம்முடைய பலத்தை உடனே திரட்டிச் சேர்த்து மதுராந்தகரைச் சிம்மாசனம் ஏற்ற ஏற்பாடு செய்ய வேண்டும் என்று சம்புவரையர் இவன் மூலமாகச் செய்தி அனுப்பி வைத்திருக்கிறார்!''

''ஆகா! அப்படியா?'' என்று பெரிய பழுவேட்டரையர் சிறிதும் உற்சாகமின்றிக் கூறினார்.

பிறகு, ''தஞ்சாவூரில் நிலைமை எப்படியிருக்கிறது?'' என்று கேட்டார்.

''அண்ணா! விவரமாகக் கூற வேண்டும். தாங்கள் மிக்க பலவீனமாக இருக்கிறீர்கள். தயவுசெய்து உட்கார்ந்து கொண்டு பேசலாமா?'' என்றார் சின்னப் பழுவேட்டரையர்.

தனாதிகாரி குகையின் வாசலிலேயே உட்கார்ந்து கொண்டார்.

''ஐயா! சற்று இடம் கொடுத்தால் குகைக்குள்ளே போய்க் குன்றின் மேல் ஏற வழி இருக்கிறதா என்று பார்க்கலாம்!'' என்றான் வைஷ்ணவன்.

''எதற்காக?'' என்றார் பெரிய பழுவேட்டரையர்.

''ரவிதாஸன் கூட்டத்தார் இந்தக் குகையினுள் புகுந்துதான் குன்றின் மேல் ஏறினார்கள்'' என்றான் திருமலை.

பெரிய பழுவேட்டரையர் தலையை அசைத்து விட்டு, ''குகைக்குள் போவதில் உபயோகமில்லை, அப்பனே! அவர்கள் மேலேயிருந்து பாறையைப் புரட்டித் தள்ளிக் குகையின் வழியையும் அடைத்து விட்டார்கள். பாறை என்மேல் விழுவதற்கு இருந்தது. என் உயிர் தப்பியதே தெய்வச் செயல்தான்! போங்கள்! நீங்கள் இருவரும் போங்கள்! மலை மேல் ஏறுவதற்கு வேறு வழி இருக்கிறதா பாருங்கள்!'' என்றார்.

ஆழ்வார்க்கடியானும் கந்தமாறனும் அப்பால் சென்றபோது பெரிய பழுவேட்டரையருடைய பார்வை சேந்தன் அமுதன் — பூங்குழலி இவர்கள் பேரில் விழுந்தது.

''அவர்கள் யார்? எங்கு வந்தார்கள்?'' என்று கேட்டார்.

''அந்தப் பெண் கோடிக்கரைத் தியாகவிடங்கரின் மகள் பூங்குழலி. அவள் தன் அத்தையைக் கொன்றவனைத் தேடிக்கொண்டு வந்தாள். அவளைத் தேடிக் கொண்டு சேந்தன் அமுதன் வந்தான். சேந்தன் அமுதன் வழி காட்டித்தான் நாங்கள் இங்கு வந்து தங்களைக் கண்டுபிடித்தோம்'' என்றார் சின்னப் பழுவேட்டரையர்.

''தஞ்சாவூரில் நடந்ததையெல்லாம் விவரமாய்ச் சொல்!'' என்றார் பெரிய பழுவேட்டரையர். சின்னப் பழுவேட்டரையர் அவ்வாறே சொல்லலுற்றார். மந்திரவாதிக் கூட்டத்தில் ஒருவன் பொக்கிஷ நிலவறையில் ஒளிந்திருந்து சக்கரவர்த்தியைக் கொல்லுவதற்காகச் சமயம் பார்த்திருந்து வேலை எறிந்ததையும் சக்கரவர்த்தியைக் காப்பாற்றுவதற்காக மந்தாகினி தேவி இடையில் புகுந்து உயிரை விட்டதையும் சொன்னார். பிறகு அவர் தொடர்ந்து கூறியதாவது:

''அண்ணா! இதற்கிடையில் கொடும்பாளூர் வேளான் பெரிய சைன்யத்துடன் திடீர் என்று வந்து தஞ்சாவூர்க் கோட்டையை முற்றுகை இடத் தொடங்கினான். தாங்கள் இல்லாத படியால் வேளாளனுடன் போர் தொடங்குவதா, இல்லையா என்று என்னால் நிச்சயிக்க முடியவில்லை. சக்கரவர்த்தியை யோசனை கேட்கவும் முடியவில்லை. முதன் மந்திரி அநிருத்தர் கோட்டைக் குள்ளேதான் இருக்கிறார். அவர் தாங்கள் வந்த பிறகு பார்த்துக் கொள்ளலாம் என்றும் அதுவரை கோட்டையைப் பாதுகாத்தால் போதும் என்றும் கூறினார். நல்ல வேளையாக இச்சமயத்தில் இளவரசர் அருள்மொழி வர்மரும் கொடும்பாளூர் வேளானுடைய மகள் வானதியும் கோட்டைக்குள் வந்து சேர்ந்தார்கள். இளவரசர் யானைப் பாகன் வேடத்தில் வந்தார். வானதி பழையாறை இளைய பிராட்டியாரிடமிருந்து அவசரச் செய்தி கொண்டு வந்திருப்பதாகக் கூறினாள். வேளானுடைய மகள் கோட்டைக்குள்ளே இருப்பது நமக்கு அனுகூலம்தானே என்று நினைத்து அவள் ஏறி வந்த யானையை உள்ளே விட்டேன். சக்கரவர்த்தியின் அரண்மனை வாயிலிலே யானைப் பாகன்தான் இளவரசர் அருள்மொழி வர்மர் என்று தெரிந்தது. நான் கொஞ்சம் மிரண்டுதான் போய் விட்டேன். அண்ணா! சின்ன இளவரசரிடம் ஏதோ அதிசய சக்தி இருக்கத்தான் செய்கிறது. அவர் திரு முகத்தைப் பார்த்ததும் எனக்கே கைகால் வெலவெலத்து விட்டது. நெஞ்சம் இளகி விட்டது. என்னை அறியாமல் என் கைகள் கூப்பிக் கொண்டன. அவரை வணங்கி வரவேற்க வேண்டியதாகிவிட்டது. சோழ நாட்டு மக்கள் இளவரசர் அருள்மொழி வர்மர் என்றால் தலைகால் தெரியாமல் கூத்தாடுவதில் வியப்பில்லைதானே?...''



பி.வி.ஆர் எழுதும்

# சென்ட்ரல்

• புதுமைத் தொடர் கதை •

**கல்கி** அடுத்த இதழில் ஆரம்பம்

இவர் பாராட்டுக்குரியவர்

வாசகர்கள் தங்களுக்கு நன்கு பழக்கமான ஒருவரைப் பாராட்டுக்குரியவர் என்று கருதி அவ்வா விளக்கங்களோடு எழுதும் சிறு கட்டுரைகள்.

சில மனிதர்கள்—
சில நினைவுகள்

- மேனு

''போதும்! போதும்! அதுதான் தெரிந்திருக்கிறதே! அருள்மொழி வர்மன் கடலில் மூழ்கி இறந்தான் என்பதெல்லாம் கட்டுக் கதை என்று நான் எண்ணியதும் சரியாய்ப் போய்விட்டது. அப்புறம் நடந்ததைச் சொல்லு! இளவரசர் எதற்காக யானைப் பாகன்போல் வேஷம் பூண்டு கோட்டைக்குள் வந்தார்?'' என்று பெரிய பழுவேட்டரையர் கேட்டார்.

''இளவரசர் என்று தெரிந்தால் கொடும்பாளூர் வேளான் அவரைத் தடுத்து நிறுத்திக் கொள்வான். கோட்டைக்குள் போக விட மாட்டான். வேளானுடைய படை வீரர்களும் பெரிய ஆர்ப்பாட்டம் செய்வார்கள் என்று எண்ணி அவ்வாறு மாறுவேடம் பூண்டு வந்தாராம். அந்த வரையில் இளவரசரைப் பாராட்டத்தான் வேண்டும். இளவரசர் சக்கரவர்த்தியைச் சந்தித்துப் பேசிக் கொண்டிருந்த சமயத்திலேதான் மேலேயிருந்து கொலைகாரன் வேல் எறிந்தான். தெய்வாதீனமாக அது அந்த ஊமைப் பைத்தியத்தின் பேரில் விழுந்து அவள் இறந்தாள். சக்கரவர்த்தியின் பேரில் விழுந்து அவர் இறந்திருந்தால் நம்முடைய குலத்துக்கு என்றும் அழியாத களங்கம் ஏற்பட்டிருக்கும்...''

பெரிய பழுவேட்டரையர் தமது வாய்க்குள்ளே ''இப்போது களங்கம் ஏற்படவில்லையா என்ன? தீராத களங்கம் ஏற்பட்டுத்தான் விட்டது!'' என்று முணுமுணுத்தார்.

''அண்ணா! என்ன சொன்னீர்கள்?'' என்று காலாந்தக கண்டர் கேட்டார்.

''ஒன்றுமில்லை. மேலே நடந்ததைச் சொல்லு!'' என்றார் தனாதிகாரி.

''அப்புறம் ஒரு பெரிய அற்புதம் நடந்தது. வெகு காலமாக நடமாட முடியாமலிருந்த சக்கரவர்த்திக்குத் திடீரென்று கால்களில் சக்தி உண்டாகிவிட்டது. ஓடிப் போய் அந்த ஊமையை எடுத்து மடியில் போட்டுக் கொண்டு புலம்ப ஆரம்பித்தார். சிறிது நேரம் நாங்கள் எல்லோரும் அந்தக் காட்சியைக் கண்டு பிரமித்து நின்று கொண்டிருந்தோம். பூங்குழலி என்னும் இந்த ஓடக்காரப் பெண்தான் 'கொலைகாரனைப் பிடிக்கப் போகிறேன்' என்று கூவிக்கொண்டு ஓடினாள். அவள் நன்றாயிருக்க வேண்டும். அவள் மூலமாகத்தான் இன்று தங்களை இந்தக் கோலத்திலாவது பார்க்கும் பாக்கியம் கிடைத்தது....''

பெரிய பழுவேட்டரையர் கண்களில் நீர் ததும்ப, ''தம்பி! புராண இதிகாசங்களில் தமையனிடம் பக்தியுள்ள தம்பிகளைப் பற்றிக் கேட்டிருக்கிறேன். ஆனால் உன்னைப் போலப் பக்தியுள்ள சகோதரன் அவர்களில் யாரும் இருக்க முடியாது. போகட்டும்; அப்புறம் நடந்ததைச் சொல்!'' என்றார்.

''பூங்குழலியைப் பின்பற்றி நானும் பொக்கிஷ நிலவறையில் உள்ள சுரங்கப் பாதையில் சென்றேன். அங்கே இருட்டில் ஒருவனைக் கைப்பற்றினேன். அவன்தான் கொலைகாரனாக இருக்க வேண்டும் என்று நினைத்தேன். குரலைக் கேட்டதும் மதுராந்தகத் தேவன் என்று தெரிந்தது.''

''அவன் எதற்காக நிலவறைப் பாதையில் வந்தானாம்?''

''அது எனக்கும் தெரியவில்லை. கேட்டதற்குச் சரியான மறுமொழியும் சொல்லவில்லை. கொலைகாரன் அவன்தான் என்ற சந்தேகம் யாருக்காவது உண்டாகிவிடப் போகிறதே என்று எனக்குப் பயமாயிருந்தது...''

''ஒருவேளை உண்மை அதுதானோ, என்னமோ?''

''இல்லை, அண்ணா, இல்லை! அந்தச் சாதுப் பிள்ளை அவ்வளவு தூரத்துக்குப் போகக் கூடியவனல்ல. மேலும், வேலை எறிந்துவிட்டு ஓடியவனை நானே கண்ணால் பார்த்திருந்தேன். மதுராந்தகன் பொக்கிஷ நிலவறையிலிருந்து வருவதற்கு இலேசில் சம்மதிக்கவில்லை. அவனை மெதுவாகச் சரிப்படுத்தி அரண்மனையில் கொண்டு போய்ச் சேர்த்துவிட்டுக் காவலும் போட்டு விட்டு மறுபடியும் பொக்கிஷ நிலவறைக்குப் போக எண்ணினேன். அதற்குள் வேறு பெரிய சம்பவங்கள் நடந்து விட்டன. 'சக்கரவர்த்தி இறந்து விட்டார்' என்றும், யாரோ அவரைக் கொன்று விட்டார்கள் என்றும் வெளியிலே வதந்தி பரவி விட்டது. உடனே கொடும்பாளூர் வேளார் அவருடைய படை வீரர்களைக் கோட்டையைத் தாக்கும்படி கட்டளையிட்டு விட்டாராம். வேளிர் படையுடன் கைக்கோளர் படையும் வந்து சேர்ந்து கொண்டிருந்தது. நமது வீரர்கள் அச்சமயம் ஆயத்தமாக இல்லை. அவர்களுக்குக் கட்டளையிட நானும் கோட்டைவாசலில் இல்லை. ஆகையால் வேளிர் படை, கைக்கோளர் படை வீரர்கள் கோட்டைக் கதவுகளை உடைத்துக் கொண்டும் சுவர்களில் ஏறிக் குதித்தும் உள்ளே வரத் தொடங்கி விட்டனர். இந்தச் செய்தியைக் கேள்விப்பட்டு நான் கோட்டை வாசல் போய்ச் சேருவதற்குள் பதினாயிரம் வீரர்கள் கோட்டைக்குள் நுழைந்து விட்டார்கள். நம்முடைய

வீரர்களோ சுமார் இரண்டாயிரம் பேர்தான். அவர்கள் வெளியிலிருந்து வந்தவர்களோடு தீரத்தோடு போரிட்டார்கள். நான் போய்க் கட்டளையிட்டுச் சண்டையை நிறுத்தினேன். நமது வீரர்களையெல்லாம் ஒரே இடத்தில் சேர்த்துக் கொண்டேன். இனிக் கோட்டைக்குள் இருப்பதில் பயன் இல்லை என்று முடிவு செய்து கொண்டு நமது வீரர்களுடன் வெளிக் கிளம்பினேன். வேளிர் — கைக்கோளர் படைகள் எங்களைத் தடுத்து நிறுத்தப் பார்த்தன. தடுத்தவர்களையெல்லாம் வெட்டி வீழ்த்தி அதாஹதம் செய்து கொண்டு வெளியே வந்து விட்டோம். 'பழுவூர்க் குடும்பத்தைச் சேர்ந்தவர்களுக்காவது மதுராந்தகத் தேவருக்காவது ஒரு சிறிது கெடுதல் நேர்ந்தாலும் கொடும்பாளூர் வம்சத்தைப் பூண்டோடு அழித்து விடுவேன்' என்று பூதி விக்கிரம கேசரிக்குச் செய்தி அனுப்பினேன். பிறகு தாங்கள் கடம்பூரில் இருப்பீர்கள் என்று எண்ணிக்கொண்டு தங்களைச் சேர்வதற்காக விரைந்து வந்தேன். எதிரில் குடமுருட்டி ஆற்றின் கரையில் கந்தமாறன் குதிரை மேல் ஏறிப் பறந்து விழுந்து கொண்டு வந்தான். பழுவூர்ப் பனைமரக் கொடியைக் கண்டதும் நின்றான். அவன் கொண்டு வந்த செய்தி எங்களை மேலும் திகைக்கும்படி செய்தது. தாங்கள் கடம்பூரிலிருந்து தஞ்சைக்குக் கிளம்பிச் சில நாட்கள் ஆயினவென்றும், தங்களுக்குப் பெரிய சம்புவரையர் செய்தி அனுப்பியிருப்பதாகவும் கூறினான். தாங்கள் தஞ்சைக்கு வந்து சேரவே இல்லை என்று தெரிந்ததும் அவனும் திகைத்துப் போய் விட்டான். பிறகு சம்புவரையர் என்னதான் செய்தி சொல்லி அனுப்பினார் என்று கேட்டேன். இளவரசர் கரிகாலர் இறந்து விட்டார் என்றும், அவரை வந்தியத்தேவன் கொன்று விட்டான் என்றும், ஆகையால் மதுராந்தகத் தேவரைச் சிம்மாசனத்தில் அமர்த்த இதுதான் தக்க சமயம் என்றும் அதற்கு வேண்டிய முயற்சியை உடனே செய்ய வேண்டும் என்றும், நம்மைச் சேர்ந்தவர்களுக்கெல்லாம் ஓலை அனுப்பிப் படை திரட்ட வேண்டும் என்றும் பெரிய சம்புவரையர் சொல்லி அனுப்பினாராம். இது எனக்குச் சரியாகப் பட்டது. தாங்களும் நமது பலத்தைத் திரட்டும் வேலையில்தான் ஈடுபட்டிருப்பீர்கள் என்றும், சீக்கிரத்தில் வந்துவிடுவீர்கள் என்றும் நம்பினேன். நமது பழுவூர்ப்

---

## விசித்திர கிரிக்கெட்

□ "கிரிக்கெட் ஒரு விநோதமான ஆட்டம்" என்று சொன்னார் ஓர் ஆங்கில அறிஞர். அதிலும் இன்று வரையில் எத்தனை விநோதமான மனிதர்கள் இருந்து வந்திருக்கிறார்கள்! ஏ. ஏ. தாம்ஸன் என்னும் பிரபலமான கிரிக்கெட் வீரர் ஆட்மென் இன் (Odd men in) எனும் புத்தகத்தின் மூலமாக நம்மை வியக்க வைத்து, அதற்கும் மேலாக வயிறு புடைக்கச் சிரிக்க வைக்கிறார்!

□ 'ரெவரண்ட் லார்ட் ஃப்ரெட்ரிக்' என்பவர் கிரிக்கெட்டையே சூதாட்டமாகக் கொண்டு நிறைய சம்பாதிப்பதாக மிகப் பெருமையுடன் கூறிக் கொள்வார்! மேலும் அவர் தாம் விளையாடும் சமயங்களிலெல்லாம் தம் தங்கக் கடிகாரத்தை வலப்புற 'பெயில்ஸின்' மேல் தொங்க விடுவார்!

□ இதோ ஓர் அதிசய நிகழ்ச்சி! 'லாரன்ஸ்' எனும் வீரர் இங்கிலாந்து லெவனைச் சேர்ந்த 'ஜூலியஸ் சீஸர்' எனும் ஆட்டக்காரரை க்ளீன் பௌல்டாக்கிய போது மூன்று ஸ்டம்புகளும் கீழே விழுந்தனவாம்!

□ 'ஜிம் ஸ்மித்' என்பவர் யாரும் செய்யாத ஒரு சாதனையைச் செய்தார். அது என்ன தெரியுமா? ஒரே 'ஷாட்டி'ல் அவர் ஒன்பது ரன்கள் எடுத்தார். இவை அனைத்தும் ஓட்டங்களே! 'ஓவர்த்ரோ'கூட இல்லை!

□ 'பீட்டர்' என்பவர் ஆடிய நாற்பத்து மூன்று 'மாட்ச்'களில் பதினேழு பூஜ்யங்கள்! இது ஒரு ரிகார்டாம்!

□ 'ரோகர் இட்டிஸன்' தம் ஆமை வேகப் பந்து வீச்சுக்குப் பெயர் போனவர். பந்தை வீசிய பின் அது சரியில்லை என்று தோன்றினால் ஓடிப் போய் அது பாட்ஸ்மனை அடையும் முன்பே அதைப் பிடித்து'' வர முடியுமாம் அவரால்!





□ ஐரிஷ் ஆட்டக்காரரான 'சார்லஸ்' விக்கெட்டுக்குப் பின்னால் ஓர் எலுமிச்சம் பழத்தை வைத்திருப்பார். ஒவ்வொரு பந்து அல்லது ஷாட்டுக்கும் அதை எடுத்து முகர்ந்து உற்சாகப்படுத்திக் கொள்வார்!

□ 'பட்ரெஸ்' என்னும் ஆட்டக்காரர் ஓர் அலாதிப் பேர்வழி! எப்போதும் அவர் எடுத்த விக்கெட்டுகளின் எண்ணிக்கை அவர் அடித்த ரன்களைவிட அதிகமாகவே இருக்குமாம்!

□ 'ஜேம்ஸ் க்ரண்டி' எனும் ஆட்டக்காரருக்கு 'அம்பயர்' மேல் சந்தேகம் போலிருக்கிறது. அதனால் தொப்பியை அவரிடம் தராமல் பந்து எறியும் போதும் பெல்டில் செருகியே வைத்துக் கொள்வாராம்! -கே. வி. எம்.

படைகளை மண்ணியாற்றுக்கும் கொள்ளிடத்துக்கும் நடுவில் திருப்புறம்பயம் மேட்டில் கொண்டு போய் நிறுத்தினேன். உடனே ஓலைகள் எழுதச் சொல்லி, மழபாடி தென்னவன் மழவராயர், குன்றத்தூர்க் கிழார், மும்முடிப் பல்லவராயர், தாளதொங்கிக் கலிங்கராயர், வணங்காமுடி முனையதரையர், தேவ சேனாபதிப் பூவரையர், அஞ்சாத சிங்க முத்தரையர், இரட்டைக் குடை இராஜாளியார் ஆகியவர்களுக்கெல்லாம் குதிரைத் தூதுவர்களை விரைந்து போகும்படி அனுப்பினேன். அவர்கள் எல்லாரையும் படைகளைத் திரட்டிக் கொண்டு திருப்புறம்பயத்துக்குக் கூடிய சீக்கிரம் வந்து சேரும்படி எழுதியிருக்கிறேன். அண்ணா! தங்களுக்குச் சிறிதும் கவலை வேண்டாம். கொடும்பாளூர் வேளானையும், திருக்கோவலூர் மலையமானையும் மறுபடியும் தலையெடுக்க முடியாதபடி அழித்துப் போட்டு விடுவோம். தஞ்சாவூர்க் கோட்டையை மறுபடியும் பிடித்துவிடுவோம். மதுராந்தகத் தேவரையும் சிங்காதனத்தில் ஏற்றி விடுவோம்!'' என்று சின்னப் பழுவேட்டரையர் உற்சாகம் ததும்ப வீர கர்ஜனை புரிந்தார்.

ஆனால் அவருடைய வார்த்தைகள் பெரிய பழுவேட்டரையருக்குச் சிறிதும் உற்சாகம் அளித்ததாகத் தெரியவில்லை. அவருடைய கவனம் திடீரென்று வேறு பக்கம் திரும்பியது.

''தம்பி! அது யார்? முகத்தில் கையை வைத்துக்கொண்டு விம்மி அழுது கொண்டிருப்பது யார்?'' என்று கேட்டார்.

''அண்ணா! தெரியவில்லையா? அவர் தான் இளையராணி! பாவம்! தங்களைக் காப்பாற்ற முயன்றதில் ரொம்பக் கஷ்டப்பட்டுப் போயிருக்கிறார் போலும்! அவரைப் பற்றி நான் குறை கூறியதையெல்லாம் மன்னித்து விடுங்கள். அண்ணா! மந்திரவாதி ரவிதாஸனும் அவனுடைய கூட்டாளிகளும் தங்களைச் சிறைப் பிடித்துக் கொண்டு வந்தார்கள் என்றும், இளையராணிதான் தங்களைத் தொடர்ந்து வந்து காப்பாற்றினார் என்றும் அறிகிறேன். அது உண்மைதானே?'' என்றார் காலாந்தககண்டர்.

பெரிய பழுவேட்டரையர், ''ஆம்! ஆம்! இளையராணிதான் என் உயிரைக் காப்பாற்றினாள். நந்தினி பணிவிடை செய்திரா விட்டால் என்னை நீ உயிரோடு பார்த்திருக்க மாட்டாய். உலகத்துக்கு உண்மை தெரியாமலே போயிருக்கும்!'' என்று கூறினார்.

''இளையராணியின் ஒப்பற்ற பெருங்குணம் எனக்கே தெரியாமல் போய் விட்டதே! உலகத்துக்கு எப்படித் தெரியும்?'' என்றார் காலாந்தக கண்டர்.

பெரிய பழுவேட்டரையர் அதைக் கவனியாமல், ''நந்தினி இன்னும் இங்கிருந்து போகவில்லையா? குகைப் படிகள் வழியாக ஏறிச் சென்றவர்களோடு அவளும் போயிருப்பாள் என்றல்லவா நினைத்தேன்?'' என்றார்.

''தங்களை விட்டுவிட்டு இளையராணி எப்படிப் போவார், அண்ணா!'' என்றார் சின்னப் பழுவேட்டரையர்.

''அது போகட்டும்! நீங்கள் இந்த இடத்தில் நாங்கள் வந்திருப்பதை எப்படிக் கண்டுபிடித்து வந்தீர்கள்?'' என்று பெரியவர் கேட்டார்.

''திருப்புறம்பயம் பள்ளிப்படையருகில் நாங்கள் தங்கியிருந்தோம். கந்தமாறன் கொள்ளிடக் கரையோரமாகக் காவல் புரிந்து கொண்டிருந்தான். அங்கே சேந்தன் அமுதன் படகில் ஏற முயன்று கொண்டிருப்பதைப் பார்த்து அவனைப் பிடித்துக் கொண்டு வந்தான். முன்னொரு தடவை வந்தியத் தேவனுக்குத் தப்பிப்போக உதவி செய்ததற்காகச் சேந்தன் அமுதனைச் சிலகாலம் நான் சிறையில் வைத்திருந்தது தங்களுக்கு நினைவிருக்கும். அவன் பேரில் கந்தமாறனுக்கு ஏற்கெனவே ரொம்பக் கோபம். இப்போதும் ஏதோ ஒற்றன் வேலை செய்கிறான் என்று சந்தேகித்துப் பிடித்துக் கொண்டு வந்தான். அவனிடம் விசாரித்த போது தங்களைப் பற்றித் தெரிந்தது. அவனுடைய மாமன் மகள் பூங்குழலி யாரோ கொலைகாரனைத் தொடர்ந்து தனியே சென்றதைக் கேள்விப்பட்டு இவன் அவளைத் தேடிக் கொண்டு புறப்பட்டானாம். பூங்குழலி அவனைத் தன்னுடன் வரக் கூடாது என்று சொல்லித் திருப்பி அனுப்பி விட்டாளாம். ஆயினும் இவன் அவள் அறியாமல் பின்னோடு தொடர்ந்து போனானாம். அப்போது திருப்புறம்பயம் பள்ளிப் படைக்கருகில் சதிகாரர்கள் சிலர் சேர்ந்து பேசுவதை அவன் அறிந்து ஒளிந்திருந்து கேட்டானாம். அப்போதுதான் தங்களை ரவிதாஸன் கூட்டம் சிறைப் பிடித்துப் பச்சைமலைப் பிராந்தியத்துக்குக் கொண்டு போயிருப்பதாகத் தெரிந்ததாம். பூங்குழலியும் வைஷ்ணவன் ஆழ்வார்க்கடியானும் பச்சைமலைக்குப் போவதை அறிந்து கொண்டு இவனும் அவர்களுக்குத் தெரியாமல் பின் தொடர முயன்றானாம். இதையெல்லாம் கேட்டதும் நானும் கந்தமாறனும் ஐம்பது வீரர்களை அழைத்துக் கொண்டு புறப்பட்டோம். சேந்தன் அமுதன் தானும் வருவதாகப் பிடிவாதம் பிடித்தான். அதுவும் நல்லதுதான் என்று

அவனை ஒரு குதிரை மேல் கட்டிப் போட்டு அழைத்து வந்தோம்! வந்தது நல்லதாய்ப் போயிற்று. தங்களைக் கண்டு பிடித்துவிட்டோம்! இனி என்ன கவலை? அண்ணா! உடனே புறப்படுங்கள். தங்களுக்கு யாதொரு சிரமமும் ஏற்படாமல் ஆட்களைக் கொண்டு தூக்கிப் போக ஏற்பாடு செய்கிறேன். இதற்குள்ளே திருப்புறம்பயத்தில் பெரும் சைன்யம் சேர்ந்திருக்கும். தஞ்சாவூர்க் கோட்டையை ஒரு ஜாம நேரத்தில் திரும்பக் கைப்பற்றி விடலாம்!'' என்று கூறினார் சின்னப் பழுவேட்டரையர்.

''ஆமாம், தஞ்சாவூருக்கு உடனே போக வேண்டியதுதான்!'' என்று சொல்லிக் கொண்டே பெரிய பழுவேட்டரையர் எழுந்து நின்றார். நந்தினி தேவி உட்கார்ந்திருந்த இடத்தை நோக்கி மெள்ள மெள்ள நடந்தார்.

அத்தனை நேரமும் ஒரு பாறைக் கல்லின்மீது உட்கார்ந்து விம்மி அழுது கொண்டிருந்த நந்தினி பெரிய பழுவேட்டரையர் தொண்டையைக் கனைத்த கர்ஜனையைக் கேட்டுத் திடீரென்று எழுந்து நின்றாள். வெறிகொண்ட கண்களால் சுற்றுமுற்றும் பார்த்தாள்.

அவளுக்கு மிக்க அருகில் நின்ற ஆழ்வார்க்கடியான் மெதுவான குரலில், ''நந்தினி! இப்போதாவது உன் சம்மதத்தைச் சொல்! என்னுடன் வருகிறேன் என்று ஒரு வார்த்தை கூறு! இந்த நாட்டை விட்டு வடநாட்டுக்குப் போவோம். பிருந்தாவனம், வடமதுரை அயோத்தி, காசி, ஹரித்வாரம், ரிஷிகேசம் முதலிய க்ஷேத்திரங்களுக்குப் பிரயாணம் செய்வோம். ஸ்ரீமந் நாராயணனுடைய திருநாமத்தைச் சொல்லிக் கொண்டு, ஆழ்வார்களுடைய பாசுரங்களைப் பாடிக் கொண்டு, நம்முடைய வாழ்க்கையை ஆனந்தமாகக் கழிப்போம். நான் என் அரசாங்க அலுவலை விட்டு விட்டு உன்னுடன் வருவதற்கு ஆயத்தமா யிருக்கிறேன்'' என்றான்.

நந்தினி கண்களில் நீர் ததும்ப அவனை நோக்கி, ''திருமலை! உனக்கு நான் இத்தனை துரோகம் செய்தும் நீ என்னிடம் வைத்த அபிமானம் மாறவில்லை. உனக்கு நீ வணங்கும் நாராயணன் அருள் புரிவார்!'' என்றாள்.

அதே சமயத்தில் பூங்குழலி சேந்தன் அமுதனிடம், ''அதோ! பழுவூர் இளைய ராணியைப் பார்! என் அத்தையைப் போலவே தோன்றுகிறாள் அல்லவா?'' என்று கேட்டாள்.

''ஆம்; தலையை விரித்துப் போட்டுக் கொண்டால், தத்ரூபமாக உன் அத்தை மாதிரியே இருக்கிறது!'' என்றான் சேந்தன் அமுதன்.

''இனிமேல் என் அத்தை இவள்தான். அத்தையிடம் இத்தனை நாள் வைத்திருந்த அன்பை இனிப் பழுவூர் இளைய ராணியிடம் வைப்பேன்!'' என்றாள்.

''என்னையும் சேர்த்துக் கொள், பூங்குழலி!'' என்றான் அமுதன்.

பெரிய பழுவேட்டரையர் இதற்குள் நந்தினி நின்ற இடத்துக்குச் சமீபமாக வந்து விட்டார்.

அதைக் கண்ட நந்தினி அவருக்கு முன்னால் பூமியில் விழுந்து வணங்கினாள். அவருடைய பாதங்களைத் தொட்டுக் கண்களில் ஒத்திக் கொண்டாள்.

பூமியிலிருந்து எழுந்ததும், நந்தினி பெரிய பழுவேட்டரையரை ஒரு முறை பார்த்தாள். சட்டென்று திரும்பினாள். சற்றுத் தூரத்தில் சின்னப் பழுவேட்டரையர் முதலியோர் கொண்டு வந்து நிறுத்தியிருந்த குதிரைகள் மீது அவள் பார்வை விழுந்தது. அவை நின்ற இடத்தை நோக்கி மிக விரைவாக ஓடினாள். எல்லாவற்றுக்கும் முன்னால் நின்ற குதிரையின் மீது தாவி ஏறிக் கொண்டாள். குதிரையின் முகக் கயிற்றைக் கையில் பிடித்துக் கொண்டு ஒரு குலுக்குக் குலுக்கித் தட்டி விட்டாள். குதிரை பாய்ந்து ஓடத் தொடங்கியது.

அதுவரைக்கும் நந்தினியின் நோக்கம் இன்னதென்று அறியாமல் செயலற்று நின்றவர்கள் இப்போது அவளைத் தொடர யத்தனித்தார்கள். சின்னப் பழுவேட்டரையர், ஆழ்வார்க்கடியான், சேந்தன் அமுதன், பூங்குழலி எல்லாருமே ஓர் அடி முன்னால் எடுத்து வைத்தார்கள்.

பெரிய பழுவேட்டரையர், ''நில்லுங்கள்!'' என்று ஒரு கர்ஜனை செய்தார்.

எல்லாரும் மறுபடியும் செயலிழந்து நின்றார்கள். பெரிய பழுவேட்டரையரையே பார்த்துக் கொண்டு நின்றார்கள்.

பெரிய பழுவேட்டரையர் குதிரை மேல் சென்ற நந்தினியின் உருவத்தைப் பார்த்துக் கொண்டே நின்றார்.

அதி வேகமாகக் காற்றைப் போல் பறந்து சென்ற அந்தக் குதிரை வெகு விரைவில் மலை அடிவாரத்தின் திருப்பம் ஒன்றில் திரும்பியது.

அவர்களுடைய பார்வையிலிருந்து குதிரை மறைந்தது.

ஆம்; பழுவூர் இளையராணி நந்தினி தேவியும் மறைந்து விட்டாள். இனி அவளை இக்கதையிலே நாம் காண மாட்டோம்.

ஒரு வேளை, பல ஆண்டுகளுக்குப் பின்னால், வேறு இடத்தில், வேறு சூழ்நிலையில், காணும்படி நேரலாம். யார் சொல்ல முடியும்? (தொடரும்)









# கால்கேட் டென்டல் க்ரீமின் மூலம் வாய் துர்நாற்றத்தைத் தடுத்திடுங்கள்... நாள்முழுவதும் பற்சிதைவை எதிர்த்திடுங்கள்!

கால்கேட், 10க்கு 7 பேர்களில் வாய்துர்நாற்றத்தை உடனடியாக அகற்றுகிறது என்றும், உணவு உட்கொண்டவுடன் கால்கேட் முறையில் பற்களைத் துலக்குவதால், இதுவரை பற்பசை வரலாற்றிலேயே கண்டிராத பேரளவில் ஏராளமானவர்களுக்கு பற்சிதைவு தடுக்கப் படுகிறது என்றும் விஞ்ஞான சோதனைகள் நிரூபித்துள்ளன. ஏனெனில், ஒரே தேய்ப்பில் வாய்துர்நாற்றத்தையும், பற்சிதைவையும் விளைவிக்கும் கிருமிகளை 85சதவீதம் வரை, கால்கேட் டென்டல் க்ரீம் அகற்றிவிடுகிறது. இத்தகைய நிரூபணத்தைப் பெற்றிருப்பது கால்கேட் மட்டுமே! அதன் வியத்தகுமிக்க பெப்பர்மின்ட் சுவையோ தனி— கால்கேட் டென்டல் க்ரீம் கொண்டு குழந்தைகள் தவறாமல் பல்துலக்க விரும்புவதில் வியப்பென்ன!




**COLGATE DENTAL CREAM**

தூய்மையான இனிய மூச்சுடனே, வெண்மையான பற்களையும் பெற்றிடவே,...உலகிலேயே அதிக மக்கள் மற்றெந்த பற்பசையையும் விட, கால்கேட் பற்பசையையே வாங்குகிறார்கள்!

DC.G.42TM




**சென்னை ஆயிரம்விளக்குப் பகுதியைச் சேர்ந்தவர் ஜனாப் ஏ. அப்துல் ரவூஃப். இவர் அகில இந்தியா முழுதும் டிரைவராகச் சுற்றுப்பயணம் செய்து வந்திருக்கிறார். டிரைவராக நீண்ட அனுபவம் பெற்றுள்ள இவர், இரண்டு சுவையான சம்பவங்களைக் கூறுகிறார்:**

பாளையங்கோட்டைக்கும் மதுரைக்கும் மத்தியில் நான் கார் ஓட்டி வந்துகொண்டிருந்தேன். இரவு ஒரு மணி. ஓர் இடத்தில் காரின் வேகம் குறைந்து கொண்டே வந்து நின்றது. ஆம்! காருக்கு முன்னே ஆறு வைக்கோல் வண்டிகள் சேர்ந்தாற்போல் சென்றுகொண்டிருந்தன. மேலே போக எனக்கு எந்தப் பக்கமும் வழி கிடைக்கவில்லை. காரை விட்டு இறங்கி வைக்கோல் வண்டிகளைப் பார்த்தேன். வண்டியோட்டிகள் நிம்மதியாகத் தூங்கிக் கொண்டிருந்தார்கள். வண்டிகள் மட்டும் அசைந்தாடிச் சென்று கொண்டிருந்தன.

நான் முதலில் சென்ற வண்டியில் ஒரு மாட்டின் மூக்கணாங் கயிற்றைப் பிடித்து ஓரமாகப் போகச் செய்தேன். அதுவும் சென்றது. அதையே மற்ற வண்டிகளும் பின் தொடரத் தொடங்கின. வழி கிடைத்தது. விட்டேன் சவாரி. வண்டிக்காரர்களை எழுப்பித் தொந்தரவு தரவில்லை.

* * *



ரொம்ப நாளைக்கு முன்னால் நடந்தது.

மாதவன் தம்பி குடும்பத்தினர் சினிமாப் பார்க்க மவுண்ட் ரோடு வெலிங்டன் தியேட்டருக்கு வந்தார்கள். நான் அவர்களைத் தியேட்டரில் விட்டுவிட்டு, அந்த நாளைய சவர்லே காரைத் தியேட்டருக்கு எதிரில் நிறுத்திவிட்டு உட்கார்ந்திருந்தேன்.

அந்தச் சமயம் மவுண்ட் ரோடு வழியாக அப்போது கவர்னராக இருந்த எர்ஸ்கின் பிரபு அவர்களும் அவரது மனைவியும் காரில் சென்று கொண்டிருந்தார்கள். காரின் பின்புறம் தீப்பற்றி எரிந்து கொண்டிருந்தது.

பின்னால் பந்தோபஸ்துக்கு வந்த போலீசார் 'தீ! தீ!' என்று கத்திக்கொண்டு வந்தார்கள். முன்னால் சென்ற பைலட்டுக்கு இது காதில் விழவில்லை. அவர்பாட்டுக்கு விரைந்து கொண்டிருந்தார்.

கவர்னர் கார் தீப்பிடித்து எரிவதைக்கண்ட நான் தாமதிக்காமல் எஜமானரது சவர்லே காரை எடுத்துக் கொண்டு விரைந்தேன். போலீசார் என்னைத் தடுக்க ஓடி வந்தார்கள். நான் காரை நிறுத்தாமல், நேரே கவர்னர் காருக்குப் பக்கத்தில் நிறுத்தி, கதவைத் திறந்து ஏறிக் கொள்ளுங்கள் என்ற பாவனையில் நின்றேன்.

கவர்னர் என்னை ஏற இறங்கப் பார்த்துவிட்டு, தம் மனைவியுடன் என் காரில் ஏறி அமர்ந்து கொண்டார். அப்போது நான் வெள்ளைக் கோட்டு, சூட்டு போட்டுக் கொண்டிருந்தேன். கார் விரைந்தது.

முன்னே சென்று கொண்டிருந்த பைலட் பாதி வழியில்தான் திரும்பிப் பார்த்தார். கவர்னர் காருக்குப் பதில் என் கார் வருவதைக் கண்ட அவர் தயங்கினார். நான் கவர்னர்தான் வருகிறார் என்று சைகை காண்பித்து, அவரைப் போகச் சொன்னேன்.

கிண்டி, கவர்னர் மாளிகையில் கார் நின்றது. கதவைத் திறந்தேன். கவர்னரும் அவரது மனைவியும் புன்னகையுடன் இறங்கினர். கவர்னர் என் முதுகில் தட்டிக் கொடுத்து, "யு ஆர் எ வெரி கிளவர் டிரைவர்!" என்றார். பிறகு என் முகவரியையும் கொடுக்கும்படி கேட்டார். நான் என் முகவரியைக் கொடுத்துவிட்டு வெலிங்டன் தியேட்டருக்கு வந்து சேர்ந்தேன்.

தீப்பிடித்த கவர்னர் கார் அங்கேயே இருந்தது. அதைச் சுற்றி மக்கள் கூட்டம் இருந்தது. நான் அங்கு வந்ததும் மக்கள் என்னைச் சூழ்ந்துகொண்டார்கள். "பலே ஆளய்யா நீ!" என்று பாராட்டினர்.

அதற்குள் மாதவன் தம்பி சினிமாப் பார்த்து விட்டு வந்தார். விஷயமறிந்து "நம்ம டிரைவர் கவர்னருக்கே 'லிஃப்ட்' கொடுத்திருக்கிறார்" என்று சொல்லி சந்தோஷப்பட்டார். அவர் மனைவி "கவர்னர் நம் காரில் சென்றது நம் பாக்கியம்" என்றார்.

மறுநாள் காலை கிண்டி கவர்னர் மாளிகையிலிருந்து ஒரு பியூன் மாதவன் தம்பி வீட்டுக்கு வந்து ஒரு கவரைக் கொடுத்து விட்டுச் சென்றான். அந்தக் கவரில் எனக்கு ஒரு சர்டிபிகேட்டும், ஐந்து ரூபாயும் இருந்தன.

* * *

அப்போது எனக்குச் சம்பளம் எவ்வளவு தெரியுமா? ரூபாய் இருபத்தைந்து. கவர்னர் டிரைவருக்குச் சம்பளம் ரூபாய் முப்பது. இந்தப் பணத்தால் குடும்பத்தைத் தாராளமாக அன்று நடத்த முடிந்தது. இன்று இருநூறுக்கு மேல் வாங்கிக் கார் ஓட்டினால்கூடக் குடும்ப வண்டி ஓட மாட்டேன் என்கிறதே!

— பேட்டி: கிரிஜா

# துள்ளும் குழந்தைகள் நன்கு வளர்ந்திட

# ருசித்துப் பருகட்டும் போர்ன்விடா!

ஓடி விளையாடும் குழந்தைகள்
உணவிலிருந்து பெறும் சக்தியை
பள்ளியிலும் விளையாட்டிலும்
வெகுவாக இழந்து விடுகின்றனர்.
அவர்களுக்கு தேவையான
இச்சக்தியை போர்ன்விடா
அளிக்கிறது. கோகோ, பால்,
மால்ட், சர்க்கரை இவை
இனிதே சேர்ந்த போர்ன்விடா,
ஒரு காட்பரிஸ் தயாரிப்பு.




**சக்திக்கும் வலிமைக்கும் —**
**மற்றும் தீஞ்சுவைக்கும் காட்பரிஸ் போர்ன்விடா !**

B/4664 TAM



கவிஞன் பிறக்கிறான், உண்டாக்கப்படுவது இல்லை; கவிதை பிறக்கிறது, செய்யப்படுவது இல்லை. கவிஞனைப் பாடச் சொல்ல முடியாது; அவனாகப் பாடுவான். கேட்பவருக்கும் கவிஞனின் உணர்ச்சியே ஏற்படுமாயின் அதுவே கவிஞனின் வெற்றி — என்கிறார் கவிஞர் மஹி.

ஒரு சமயம் கவிஞர் கன்னியாகுமரி போய் இருந்தார். அதிகாலை; அம்மனைத் தரிசித்து விட்டு இருப்பிடம் வந்தார். அப்போதும் கடற்கரையிலே வீற்றிருக்கும் அம்மன் திருவுருவமே கண்




முன் காட்சி அளித்தது. அப்போது உருவாகிறது கவிதை:

ஏனம்மா நிற்கின்றாய்
  எதிரே கடற்கரையில்
வானந்தான் வரவேற்று
  வரிசை அனுப்பிடுதோ
ஏனோதான் கடலலைகள்
  எழுந்துன்றன் தாளிணையில்
தானாகப் பணிகிறதால்
  தவம்செய்து நிற்பதுவோ?

சென்னை பாரதிக் கலைக் கழகம் நடத்திய பாரதி கவி அரங்கில், குயில் — ஒரு புதிர் என்ற தலைப்பில் பாடும்படி அழைத்தார்கள். அன்றைக்கு அரங்கேற்றிய அப்பாடலின் ஒரு பகுதி இதோ:



கவிதைக் குயிலாகக்
  காலமெலாம் கூவுகிறேன்
கவிதைக் குரலாகக்
  கானம் பொழிகின்றேன்
கவிதைக்கே சாவில்லை
  கத்துகுயில், உயிர்போல
கவிதைக் குயில்உயிர்நான் -- ஒரு
  கவிஞனுக்காய் ஏங்குகிறேன்.

என்று எந்தக் கவிஞனுக்காக ஏங்குகிறார், கவிஞர் மஹி? அதற்குப் பதில் அவரே சொல்கிறார்:

பாட்டுக் கொருபுலவன்
  பாரதிதான் அவன்பின்னே
பாட்டுத் திறத்தாலிப்
  பாருலகைப் பாலிக்க
வேட்டுக் கவியமைக்கும்
  வேறொருவன் தோன்றவில்லை
கூட்டுக்கு வெளிவந்தேன்
  கூக்குரலாய் 'கூ! கூ! கூ!'

சீனப் படையெடுப்பைக் கேட்டவுடன், நமது எல்லை காத்த வீரருக்கு வாழ்த்துக் கூறிப் பாடினார் கவிஞர்:



எல்லை காக்கும் வீரரே - நீர்
  எதிரி தாக்க நிற்கிறீர்
தொல்லை தாங்கும் தீரரே - உம்
  துணிவு எங்கள் பொக்கிஷம்

## வானத்தின் வரவேற்பு; அலைகளின் அஞ்சலி!

கவிஞர் சிறுவராக இருந்தபோது, அவர் வீட்டுக்குப் பக்கத்து வீட்டில் வடநாட்டவர் குடியிருந்தனர். அந்த வீட்டில் ஒரு சிறுமி கவிஞரோடு அன்பாகப் பழகி வந்தான். பிறகு அவர்கள் வீட்டைக் காலி செய்து விட்டுத் தம் சொந்த ஊருக்குப் போய் விட்டார்கள். ஆனால் சிறுமியின் கள்ளங் கபடமற்ற வெள்ளை உள்ளம் கவிஞரை ஏங்க வைத்தது. அவள் நினைவாக எழுந்ததுதான் இந்த ஏக்கப் பாடல்:

மதிபோன்ற வட்டம்; மையத்தில் கூர்வேல்
பதிவுற்றே; நெஞ்சில் பதைப்புற்றே; உன்மேல்
துதிபாடும் என்னுள் துயரம்பு விட்டே
விதிபோலும் வந்தாய்; விளைவற்றுச் சென்றாய்!

அதோடு நின்றாரா, கவிஞர்? ''புயல் போலும் வந்தாய்; புகைபோலும் சென்றாய்! மின்னலாய் வந்தாய், மீண்டுடன் சென்றாய்! கானலாய் வந்தாய், காற்றோடும் சென்றாய்! நனவென்று தொட்டேன், கனவென்று சென்றாய்!'' என்று ஏக்கப் பெருமூச்சு விடுகிறார்.

பேட்டி: பி. வி. கிரி

# பச்சை நிற கோலினஸ் குளோரோபில் வாய் துர்-நாற்றத்தை வெல்லுகிறது.

**பச்சை நிற கோலினஸ் குளோரோபில் பற்பசையில் குளோரோபில் அடங்கியுள்ளது. பசும் இலைகளி-லிருந்து ஆக்கம் பெறும் குளோரோபில் இயற்கை யாகவே துர்நாற்றம் போக்கும் தன்மையுடையது.**

பச்சை நிற கோலினஸ் பற்பசையால் பல் துலக்கி, அருவருப்பான வாய்நாற்றம் போக்குங்கள். அதன் புதுமையான 'மின்டி' சுவையையும் வளமான நுரையையும் நீங்கள் ரசிப்பீர்-கள். இரவிலும் காலையிலும் பச்சைநிற கோலினஸ் குளோரோபில் பற்-பசையால் பல் துலக்குங்கள்.

**இந்த 'நட்பு மிக்க மூச்சு' சோதனையை நீங்களே செய்து பாருங்கள்.**

உங்கள் வாய்க்கு அருகில் உள்ளங்கையைப் பிடியுங்-கள். அதன் மீது நீண்ட மூச்சு விடுங்கள். விரைவாக மூச்சை உள்ளுக்கு இழுங்-கள். பிறகு பச்சை நிற கோலினஸ் குளோரோபில் பற்பசையால் பல் துலக்குங் கள். சோதனையை மீண்டும் செய்து பாருங்கள். இப்போது உங்கள் மூச்சு தூய்மையுடன் இனிமையாக விளங்குவதைக் காண்பீர்கள்.




KC-9

**பச்சை நிற கோலினஸ் குளோரோபில்**

Regd. User of TM: Geoffrey Manners & Co., Ltd.

# பொன்னான கலை; பெண்களுக்கு நகை



நான்கு தலைமுறைகளாக, பொற்கொல்லர்களாகவே வாழ்ந்துவரும் குடும்பத்தைச் சேர்ந்தவர் திரு ஆர். குழந்தைராஜன். குழந்தையாக இருக்கும்போதே தம் தந்தை ராஜாராம் பத்தரிடம் குழந்தைராஜன் முறையாகத் தொழில் கற்றுக் கொள்ள ஆரம்பித்து விட்டார்.

''தங்க நகைகளைச் செய்ய ஆரம்பித்து எத்தனை வருடங்கள் ஆகின்றன?''

''நாற்பத்திரண்டு வருடங்கள்!''

''என்னென்ன நகைகள் செய்திருக்கிறீர்கள்?''

''தங்க நகைகள், வைர நகைகள், நவரத்தின ஆபரணங்கள் — இவற்றில் எல்லா விதமான வேலைப்பாடுகளும் செய்யத் தெரியும். இன்றும் செய்து கொண்டிருக்கிறேன்.''

''உங்களிடம் எத்தனை சிப்பந்திகள் பணி புரிகிறார்கள்?''

''ஆறு பேர் இருக்கிறார்கள். அறுவரில் என் மகனும் ஒருவன். இருபது வயது. பள்ளிக்கூடம் போய் வந்த பிறகு, இதே தொழிலுக்கு அவனையும் தயாராக்கியிருக்கிறேன். பத்தாவது படிக்கும் இன்னொரு பிள்ளை



கூட, ஒழிந்த நேரத்தில் எனக்கு உதவி செய்கிறான்.''

மிகுந்த நம்பிக்கைக்குரியவர், குறித்த நேரத்தில் நகைகளைச் சிறப்பாகச் செய்து கொடுப்பவர் என நிறுவனங்களிடமிருந்தும் தனிப்பட்டவர்களிடமிருந்தும் பெற்றிருக்கும் பாராட்டுக் கடிதங்களைப் பத்திரமாக வைத்திருக்கிறார்.

தம் தொழில் திறமையை உரைத்துப் பார்க்கும் எவ்விதமான பரீட்சைக்கும் இவர் தயாராக இருக்கிறார்!

காதணிகளாயினும் சரி; வளையல்களாயினும் சரி; கழுத்துச் சங்கிலிகளாயினும் சரி; நெக்லெஸ்களாயினும் சரி — 'மாதிரி (டிசைன்) எழுதிக் கொடுத்தபடியே செய்து தருவேன்! அது எத்தனை சிக்கலான நவநாகரிக மோஸ்தராயினும் அப்படியே செய்து தருவேன்' என்று சவால் விடுகிறார் — இந்தக் குழந்தை ராஜன்.

''நெக்லெஸ் (அட்டிகை) இது வரை எத்தனை செய்திருப்பீர்கள்?''

''பொன்னை உருக்க ஆரம்பித்து, கல் பதிக்க ஆரம்பித்த நாற்பது ஆண்டுகளில் ஆயிரத்துக்கும் அதிகமான எண்ணிக்கையில் நெக்லெஸ்கள் செய்து கொடுத்திருக்கிறேன். வைர நெக்லெஸ்கள் முந்நூறுக்கு மேல். மற்றவை ரங்கூன் கமலம், சிவப்புக் கல் இப்படி....''

## ஆயிரத்தைக் கண்டவர்

நேதாஜி சுபாஷ்சந்திர போஸ் சாலையில் இருந்து வரும் கோவிந்தராஜுலு நாயுடு ஜுவல்லர்சுக்கு, பதினெட்டு வருடங்களாகத் தொடர்ந்து 'ஆர்டர்கள்' கொடுப்பதற்கேற்ப இவர் நெக்லெஸ் நகைகள் செய்து கொடுத்து வந்திருக்கிறார். குழந்தைராஜன் தொடர்பு கொண்டிருக்கும் இதர நகை வியாபாரிகள் — நாதெள்ள ஆனந்தம் செட்டி, சுங்கு ஜுவல்லர்ஸ், சதானந்தம் செட்டியார், ஜெயராம் செட்டியார் ஆகியோர்.



''நகை வியாபாரம் செய்யும் நிறுவனங்களிலிருந்தே முக்கால்வாசி வேலை எனக்கு வரும். மீதம் கால்வாசி பல வருஷங்களாக என்னிடம் நேரில் நகை செய்ய வரும் குடும்ப வாடிக்கைகள்'' எனவும் கூறும் குழந்தைராஜன் மேலும் சில கேள்விகளுக்கும் பதில் தருகிறார்.

''வைர நெக்லெஸ் செய்ய எத்தனை நாட்கள் ஆகும்?''

''பதினைந்து நாட்கள் தேவைப்படும். அப்போது தான் நகை உறுதிப்பாடாக அமையும் என்பேன். ஆனால் ஒரு கல்யாணத்துக்காக நான் வைர நெக்லெஸ் செய்யும் பொறுப்பை ஏற்று, இரவு பகலாகத் தொடர்ந்து வேலை செய்து ஒரு வாரத்துக்குள் செய்து முடித்தேன். இது தான் குறைந்தகால அளவு.''

''பொற்கொல்லர் என்ற முறையில், நீங்கள் உங்கள் வாழ்நாளில் பார்த்த வியப்பான நிகழ்ச்சி என்ன?''

''பல பெரிய மனிதர்கள் வீட்டுக்கும் கோயில்களுக்கும் போய் வந்திருக்கிறேன். எத்தனையோ பெரிய விலை உயர்ந்த நகைகளைக் கண்டிருக்கிறேன். எல்லாவற்றையும் மிஞ்சும்படியாக நாகைப்பட்டினம் நீலாய தாட்சி அம்மன் கோயிலினுள் பத்திரமாக வைத்திருக்கும் கோமேதக சிவலிங்கம் பார்த்தேன். அரை சாண் உயரம், அகலம் கொண்டது. ஒரே கல்லால் ஆனது. கண்ணைப் பறிக்கும் குத்து விளக்கு ஜோதி போல் லிங்கம் காணப்படுகிறது. மாமேதையான ஒரு கலைஞர் அதைச் செய்திருக்க வேண்டும்!'' என்றார்.

இசை ஞானமும் உண்டு. 'முகர்சங்கு' வாசிக்கக் கற்றுக் கொண்டு, அறுபது கச்சேரிகளிலும் வாசித்திருக்கிறார்!

பேட்டி: **ஏ. சுவாமிநாதன்**

# பிள்ளையார்

## 'குகப்ரியை'

ஐந்து கரத்தனை ஆனை முகத்தனை
இந்து இளம்பிறை போலும் எயிற்றனை
நந்திமகன்தனை ஞானக் கொழுந்தினை
புந்தியில் வைத்து அடிபோற்றுகின்றேனே.

-திருமூலர்

நம்முடைய நாகரிகம் நதிக் கரையிலே பிறந்து வளர்ந்தது. ''நதிக்கரை நாகரிகம்'' என்றே இதனைக் கூறுவர் பெரியோர். ஆற்றின் கரையிலே அரசடிப் பிள்ளையார் அமர்ந்திராத துறை எது? குளம் ஏரி போன்ற நீர் நிலைகளின் கரையிலும் அவர் நாகர்கள் புடை சூழ அமர்ந்திருப்பதை எங்கும் காண்கிறோம். தெரு முனைகளிலும்தான் எத்தனை எத்தனை விநாயகர்கள்! சித்தி விநாயகர், பிரசன்ன விநாயகர், செல்வ விநாயகர், வரத விநாயகர் விகட விநாயகர், நர்த்தன விநாயகர், கற்பகப் பிள்ளையார், க்ஷேத்திரபாலப் பிள்ளையார், முக்குறுணிப் பிள்ளையார் என்றெல்லாம் பெயர்கள் தாங்கி வீதிகள்தோறும், சாலைகள் தோறும், சந்துகள்தோறும் எழுந்தருளி, தலை தாழ்த்திக் கரம் குவித்தாவது செல்லுங்கள் என்று கட்டளை இடுவது போல் அமர்ந்திருப்பதைக் காண்கிறோம்.

இறைவன் நாத ஸ்வரூபி, ஒலியே வடிவானவன், ஓங்கார வடிவினன் என்பதை விநாயகப் பெருமானது திருவுருவம் நமக்கு எடுத்துரைக்கிறது. நம் நாட்டில் விநாயகப் பெருமானது வழிபாடு நெடுங்காலமாக இருந்து வருகிறது. சிலர் பிற்காலத்தே எழுந்தது என்றும் சொல்வதுண்டு. ஆனால் ஸ்ரீ சங்கர பகவத் பாதர்கள் நிலைநிறுத்திய ஷண்மதங்களிலே காணாபத்யம் முதலிலே வருகிறது என்பதை நாம் அறிவோம். நம் காரியங்கள் அனைத்திலும் இடையூற்றினை அகற்றுவதற்காக முதலிலேயே வருவது விநாயக வழிபாடு.

ஒரு சிறு சீட்டு எழுத வேணுமா? பிள்ளையார் சுழி வைத்தே தொடங்குவது மரபு. பாத்திரம் செய்கிறார் ஆசாரி. நடுவிலே ஒரு சிறு புள்ளி கணநாதரது திருவடியின் பெயரால் விழுகிறது. கிணற்றிலே ஏற்றம் இறைக்கிறான் விவசாயி, ''பிள்ளையாரே, வாரீர்!'' என்ற இசையொலி இந்த இயந்திர யுகத்திலும் நம் செவிகளுள் விழுகின்றது.

இலக்கியத்திலே, கல்லாடம் ஓர் அருமையான நூல். அதில் வரும் வேழமுகக் கடவுள் வாழ்த்து மிக மிக அருமையானது என்பர். அதற்கு முற்பட்ட நூல்களிலே காப்புச் செய்யுள் இல்லை. ஆகவே, வழிபாடு வாதாபி வெற்றிக்குப்பின் எழுந்தது என்பர். அதைப் பற்றி நமக்கென்ன? நாம் காண்கிற எல்லா நூல்களிலும் காப்புச் செய்யுள் இல்லாதது எது? சிலர் திருமுறைகளிலே இடமில்லை என்றாலும்கூட, அதே திருமுறையில், 'மதகரி உரித்தோன் மதகளிறு முகவும்' என்ற பாடலை அழகிய பண்ணிலே இசைத்துக் கேட்கும் பொழுது நமது சந்தேகங்கள் தாமாகவே விலகி ஓடிவிடுகின்றன. இத்தகைய மூத்த பிள்ளையாரை, அன்றும் இன்றும் என்றும் வழிபட்டுப் பேறு பெற்றவர்கள் பலர்.

குழந்தையே தெய்வம், தெய்வமே குழந்தை என்று கண்ட பலரும் பிள்ளைத் தமிழ் என்ற சுவை சொட்டும் பாடல்களால், பாடியும் ஆடியும் புகழ்வதைப் பார்க்கிறோம். இத்தகைய பிள்ளைத் தமிழிலே, 'பிள்ளையார்' என்றே பெயர் கொண்ட விக்நேசுவரர் மீது அமைந்த செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத் தமிழும் ஒன்று. அதில் உள்ள இரண்டு கவிதைகள் இவரது பெருமையை அருமையாகப் பேசுகின்றன.

மறைநெறி ஒழுகுநர் தங்களை ஆள மதித்த
மறைப் பொருளே!
வளி, வெளி சலம் நிலம் அங்கி யெலாம்
உருவத்து நிறுத்தவனே!

.........................................

நிருமல அறிஞர் சிந்தை நிலவிய நிர்குண
அற்புதனே



அறை கோடி உலகோடு பங்கயன் மாலை அளித்து
வளர்த்தவனே!
அவரவர் பேறுவுறு பந்தமும் வீடும் அமைத்த
அறக்கடலே!
முறைவளர் கலசை கொள் செங்கழுநீர் இறை
முத்தம் அளித்தருளே!

இந்தப் பாடல் விநாயகப் பெருமானையே முழு முதற் கடவுளாக, பங்கய பிரம்மனையும் திருமாலையும் அளித்து வளர்த்தவன் என்றும், பந்தமும் வீடும் அமைத்தவன் என்றும் பேசுகிறது.

அடுத்தது ''வருக! வருகவே!'' என்ற அழகான பாடல். இதைப் பாடும் போது தவழ்ந்தும், தளர் நடை நடந்தும், தியாகராஜர் சொன்னது போல் 'விலித கதுல நித்தளாங்குமனி' என்று பல சதிகளில் நர்த்தனம் செய்து கொண்டும் நம் கண் முன்னே வருகிறார் கூத்தாடும் பிள்ளையார்.

உருகும் அடியார் அன்பூற உள்ளே ஊறும்
தேனே! வருக!
உண்ணத் தெவிட்டாச் சிவானந்த ஒளியே வருக!
-- புலன்வழி போய்
திருகும் உள்ளத்தார் நினைவினுக்குச் சேயாய் வருக!
எமை ஆண்ட செல்வா! வருக! இமை விழியால்
பருகும் அமுதே! வருக! உயிர்ப் பைங்கூழ்
தழைக்கக் கருணை மழை
பரப்பும் முகிலே! வருக! நறும் பாகே! வருக!
வரை கிழித்த
முருகவேட்கு முன்உதித்த முதல்வா வருக!
வருகவே!
மூரிக் கலசை செங்கழுநீர் முனியே வருக வருகவே!

என்று அழைக்கின்றார் கவிஞர்பெருமான்.

முகில்வண்ணனுக்கு மருகனல்லவா? முகிலானது எப்படித் தன்னையே கரைத்துக் கொண்டு மக்களது வாழ்வை வளம் செய்விக்கிறதோ அது போல் இறைவன் கணநாயகன் தன்னையே நமக்கு உடைமையாக்கி அருள் மாரி பொழிகின்றான்! இதைத்தான்,— ''உயிர்ப் பைங்கூழ் தழைக்கக் கருணை மழை பரப்பும் முகிலே'' என்கிறார்.

''வரைகிழித்த முருகவேட்கு முன் உதித்த முதல்வா!'' என்பதில்தான் எத்தனை வேகம்! முருகன் கிரவுஞ்சவரையைப் பிளந்த அந்த அற்புத வேகமே விநாயகருடைய அருளின் வேகம் என்பது போல் தொனிக்கிறது!

பொதுவாக, ஒரு நூலைத் தொடங்குமுன் காப்புச் செய்யுளும் முடிவில் நூற்பயன் என்று



பல கருதி சொல்வதும் வழக்கம். ஆனால் விநாயகப் பெருமானைப் பொறுத்த வரையில் மக்களுக்கு உடனேயே அருள் கிட்ட வேணும் என்ற நினைவினுலோ அல்லது அந்தக் கணத்திலேயே அருள் சுரக்கும் வேகத்தினுலோ பலரும் தொடக்கத்திலே கூறும் செய்யுளிலேயே பல கருதியையும் இணைத்து விடுகிருர்கள். உதாரணமாக,

அல்லல் போம், வல்வினை போம், அன்னை வயிற்றிற் பிறந்த
தொல்லை போம் போகாத் துயரம் போம், நல்ல
குணம் அதிகமாம், அருணைக் கோபுரத்துள் மேவும்
கணபதியைக் கைதொழுதக் கால்

யோகாசனத்தின் நுண்ணிய உண்மைகளை அப்படியே பொதிந்து கொண்டுள்ள 'விநாயகர் அகவலை'த் தந்த ஔவையார் தமது நல்லுரையைத் தொடங்கும் போதே, விநாயகப் பெருமான் அருளால், என்னென்ன கிடைக்கிறது என்பதை மிக மிக அழகாக,

'' வாக்கு உண்டாம், நல்ல மனம் உண்டாம்,
மாமலராள் நோக்கு உண்டாம் ''

என்கிருர்.

இவை கணபதியைக் கை தொழுதால் என்ன கிடைக்கும் என்று வருங்காலத்திலே பேசுகின்றன. ஆனால் இவரது பேரருளால் நமக்கு, நம் நாட்டுக்கு, நம் பண்பாட்டுக்கு ஏற்கனவே என்னென்ன கிடைத்திருக்கின்றன? அதன் பயனுக நாம் எவ்வளவு வளம் பெற்று வாழ்கிறோம் என்பதைப் பார்ப்போம்.

பார்வதி பரமேசுவரத திருக்கலியாண நெரிசலில் இமயம் தாழ்ந்த போது, உலகைச் சமன் நிறுத்துவதற்காகக் குறுமுனி அகஸ்தியர் கமண்டலுவும் கையுமாகப் பொதியம் போந்ததை உலகு அறியும். மக்களுக்குச் சக்தியை வழங்க, உடல் வலிமையை வழங்க, எது தேவை? நல்ல உணவு. உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே ! ஆகவே, மக்களது வாழ்வை வளம் செய்ய, இந்த அருமையான சந்தர்ப்பத்தை ஏன் பயன் படுத்தக் கூடாது என்று எண்ணிவிட்டார் விநாயகப் பெருமான். குறுமுனிவர் கையிலே இருந்த கமண்டலுவைப் பாறையின் அணைப்பிலே வைத்துவிட்டு மாலை வழிபாடுகள் செய்ய அமர்ந்தார். எங்கிருந்தோ வந்தார் கணபதி அண்டங் காக்கையாக. கமண்டலுவை உருட்டித் தள்ளியது காகம். அதிலிருந்து கங்கை நீர் போல் பெருகி ஓடுவது கண்டு மகிழ்ச்சியினுல் துள்ளி அதில் தானும் நனைந்து சிறகுகளைப் படபடவென்று அடித்துக் கொண்டு பறந்தோடிற்று. இவ்விதமாக ஆம்பல் பூத்த ஸஹ்ய பருவத மடிவிலே பிறந்தாள் காவிரிப் பெண்.

ஆக, கணேசனின் பேரருளாலேயே, ''பொன்னி நதி பாயும் சென்னெல்வினை நாடே !'' என்று பாவலர் போற்ற, காவிரித் தாயின் அருளால் நமக்கு உடல் நலம் பெருகிச் சக்தியும் பெறுகிறோம்.

* * *

மனிதன் காவிரியின் நன்னீரால் வேளாண்மையில் வெகு பலன் கண்டு உடல் வன்மை பெற்ருன். சக்திக்கு அடுத்தபடி எது தேவை? பக்தி. உணவு போல் மனத்துக்குச் சமய உணர்ச்சி தேவை. ஆகவே, தமிழ் நாட்டிலே தாம் கொணர்ந்த காவிரியின் கரையிலே தாம் கண்ட அழகுத் தெய்வத்தைக் கொணர வேணும் என்ற எண்ணம் எழுந்தது, பிள்ளையாரது அருள் நெஞ்சத்திலே. அகண்ட காவிரியின் கரையிலே, எங்கே எதைச் செய்யலாம், எந்தப் பருவம் அதற்கு ஏற்றது என்று காத்திருந்தார் அவர்.

அழகிய செவிகளை ஒரு முறை அசைத்து வான வீதியை நிமிர்ந்து நோக்கினுர். ககன மார்க்கத்திலே ஒரு கவினுறு காட்சி. தோளில் கதாயுதத்துடன் அழகிய பொற் பெட்டகம் போன்றதொரு பொருளைக் கையிலேந்தியவனுய்த் தெற்கு நோக்கி அயோத்தியினின்றும் வந்து கொண்டிருந்தான் விபீஷணன். வேழ முகத்திலே இளமுறுவல் மடல் அவிழ்ந்தது. மறுவிநாடி அங்கே அழகிய பிரம்மசாரி ஒருவன் நின்ருன். அந்தக் காவிரி சூழ்ந்த பசும் தீவிலே அந்தணச் சிறுவன் ஏதோ வேத பாடங்களை முறை முறைத்தவண்ணம் உலவினுன். காவேரி தீரம் கண்களைக் கவரக் கரையிலே இறங்கினுன் விபீஷணன். சிறுவனது பேரெழிலும், பிரம்ம தேஜஸும் அவன் கண்களைக் கவர்ந்தன.

பொழுது சாயும் நேரம். சந்தியாவந்தனம் செய்ய ஏற்ற நதி. இராமபிரானே விபீஷணன் சுமந்து வரும் இந்த அரங்கநாதப் பெருமானை, இக்ஷ்வாகு குலதனத்தை, பூமியில் எங்கும் வைக்காமல் நேரே இலங்கை சென்று பிரதிஷ்டை செய்யப் பணித்திருக்கிருர்..... ஆகவே, இங்கு நிலத்தில் விக்கிரகத்தை வைக்காமல் இந்தச் சிறுவனிடம் கொடுத்து விட்டுச் சந்தி வழிபாட்டை முடிப்போம் என்று நினைத்தான் விபீஷணன்.

''அடியேன் நைஷ்டிகப் பிரம்மசாரி. பரம பவித்திரமாகக் கீழே வைக்காமற் காப்பேன். கொடுங்கள்'' என்று இரு கரங்களையும் நீட்டினுன் பாலன்.

''இதோ பெற்றுக் கொள்ளுங்கள், மகா பாக்கியம் !'' என்ருன் விபீஷணன்.

சிறுவன் கனிவுடன் கூடிய குரலில், ''ஆனால் ஒரு நிபந்தனை. நான் பொறுமை

## நேரம் பொன்ணனது...

ஜப்பானியர்கள் நேரத்தை வீணுக்காது உழைப்பவர்கள் என்பது உலகறிந்த உண்மை ! இதோ அதற்கு ஒரு சான்று :

டோக்கியோவில் உள்ள 'டெட்சு ஒசாவா' என்பவர் தமது முடிவெட்டும் 'சலூனி'ல் நான்கு சுருக்கெழுத்தாளர்களை (ஸ்டெனே) அமர்த்தியிருக்கிருர். தம்மிடம் முக க்ஷவரம் அல்லது முடி வெட்டிக் கொள்ளும் நேரத்திலேயே வியாபார சம்பந்தமான கடிதங்களைச் சொன்னுல், அதைச் சுருக்கெழுத்தில் எடுத்து 'டைப்' செய்து கொடுக்கத்தான் இந்த ஸ்டெனேக்கள்! முடிவெட்டும் நேரத்தைக்கூடப் பயனுள்ளதாக்கிக் கொள்கிருர்கள் ஜப்பானியர்கள்! ஆதாரம்: ''கரண்ட்'' - கே.எஸ். குமாரி



யாய் வைத்திருப்பேன். காத்திருந்து மூன்று குரல் கூப்பிடுவேன். மூன்றுவது குரலுக்குள் நீர் வாங்காவிடில் கீழே வைத்து விடுவேன்'' என்றான். அவனது முகத்தைக் குறுநகை அணி செய்தது.

சிறு பிள்ளை பரிகசிக்கிறன் என்று எண்ணிக் காவிரியிலே இறங்கி அனுஷ்டானங்களைத் தொடங்கினான் விபீஷணன்.

அவ்வளவுதான். மாயச் சிறுவன், —



''ஸ்வாமீ! ஸ்வாமீ, ஸ்வாமீ!'' என்று கூவி விட்டு, மூன்று குரல் கொடுத்தாயிற்று என்பதால் அந்தப் பேழையைத் தரையில் வைத்து விட்டு ஓடலானான். பேழையை எடுக்க வேணும் என்று தோன்றுதவனை அவனைத் துரத்திக் கொண்டு ஓடினான் விபீஷணன். சின்னஞ்சிறு பையன். அநாயாசமாய் அகண்ட காவிரியையும் தாண்டி அங்கிருந்த நெடுங்குன்றின் மேலேறி ஓடினான்.

குன்றின் நடுவே சிவாலயம், விபீஷணன் சிறந்த சிவபக்தன். மலையைத் தலையால் வணங்கி, உச்சியை நோக்கி ஏறும் அந்தச் சிறு பயலைப் பிடித்துவிட வேணும் என்று ஓட அங்கே உச்சியில் மௌனியாய் அமர்ந்திருந்தான் சிறுவன். சிறுவன்தானா? விபீஷணன் திகைத்துப் போனான். ஆச்சரிய மிகுதியால் அவன் கண்கள் மலர்ந்தன. ''விநாயகப் பெருமானே! இதுவும் உன் விளையாட்டா ?'' என்று எண்ணிக் கரம் குவித்தான் விபீஷணன். திருச்சியில் உச்சிப் பிள்ளையாராகிவிட்ட தேவனை வணங்கி, மீண்டும் பேழையை எடுக்க இக்கரைக்கு வந்தான்.

பேழை அசையவில்லை. ''அப்பா விபீஷணா! இந்தப் பகந் திவு என்னை மிகவும் வசீகரித்து விட்டது. இங்கு இருந்தபடியே இலங்கை நோக்கி உனக்கு அருள் செய்கிறேன். வருடத்தில் ஒரு நாள் நீ இங்கு வந்து வழிபாடு செய்யலாம்'' என்றார் ஸ்ரீ ரங்கநாதர்.

குடதிசை முடியை வைத்து — குணதிசை பாதம் நீட்டி அங்கேயே அறிதுயில் கொண்டு விட்டார் ஸ்ரீ ரங்கநாதர். இப்படி நமக்குப் பக்தியைப் புகட்டிய அற்புதம் என்னே! காவிரிப் பெருநதியிலே கருணை மாமுகில் துயிலும் அமுதக் காட்சி நமக்குக் கிடைக்கச் செய்தது பிள்ளையாரப்பன் லீலையால் அன்றோ?

இவ்வளவோடு அவர் திருப்தி அடையவில்லை. சக்தியைக் கொடுத்தோம். பக்திக்கு வழி வகுத்தோம். ஆனால் மனிதன் பூரணத்துவம் பெற இவை போதா என்று கருதினார் கணநாதன். 'வாழ்க்கையை வளம் செய்வது இலக்கியம். சிறந்த இலக்கிய நூல்கள் புராண, இதிகாசங்களைப் பயில்வதன் மூலம் தான் மக்கள் நலம் பெறுவர்' என்று நினைத்தார். அவரது எண்ணங்களே உருப் பெற்று வந்தது போல் எதிரே நின்றார் வியாச பகவான். அவர் வேத வியாசர் என்ற பெயரும் பெற்றவர். அவர் நாலு வேதங்களையும் சிடுக்கெடுத்து முறைப்படுத்தியது போதாது; அது ஒரு சிலருக்கே பயன்படக் கூடியது; ஆகவே, ஐந்தாம் வேதம் என்னும் மகாபாரதத்தை எல்லோரும் எளிதில் படிக்கக் கூடிய வகையிலே இதிகாசமாக்கிப் பொன்மொழிகளையும், உபதேசங்களையும், சுவையுள்ள கதை வடிவிலே கொடுப்போம் என்று கருத, தியாக மூர்த்தியான கஜமுகன் தன் கொம்பையே ஒடித்து மேருவை ஏடாக்கி மாபாரதம் எழுதினார். அது மட்டுமல்ல, தமிழ் மக்களுக்குக் காவிரியும், திருவரங்கமும் தந்த பிள்ளையார் திருநாரையூரிலே பொல்லாப் பிள்ளையாராக எழுந்தருளி, நம்பியாண்டார் நம்பிக்கு அருளித் தேவாரத் திருமுறைகளை மீண்டும் உலகுக்கு அளித்தார்.

தமிழகம் தழைக்கச் செய்த ஆனைமுகனைக் குறித்து இந்த நாட்டில் வழங்கும் வரலாறுகளும், ஐதிஹ்யங்களும் அனந்தம். அதில் அதிகம் கேள்விப்படாத ஒன்றைப் பார்ப்போம்.

ஒரே இரவில் நாற்பது வேலி நிலம் உழ வேண்டிய சோதனைக்கு ஆளான நந்தன், திருப்புன்கூரில் ஒரு குட்டையைக் குளமாக்க வேண்டிய சிரம சாத்தியமான பணியையும் ஏற்க நேர்ந்தது.

அப்போது எளிய நந்தனிலும் பரம எளியனாக ஒரு தீனன், வஞ்சனையறியா நிர்மல முகத்தோடு வந்து நின்றான்.

''நீ யாரப்பா?'' என்று பரிவோடு கேட்டார் நந்தனார்.

''நான் உன் ஆளப்பா!'' என்று பரிவுடன் சொன்னான் வந்தவன்.

''குட்டையைக் குளமாக வெட்ட வேணும்.''

''வெட்டினால் வெகு புண்ணியம். நான் செய்கிறேனே.''

''ஆனால் என்னால் பதக்கு நெல்தானே கூலி கொடுக்க முடியும்?''

''அதுவே போதும், போதும்! ஏராளம்!. இதோ வெட்டுகிறேன்'' என்று உடனே மண் வெட்டியும் கையுமாய்க் கம்மாடு கோலி வைத்துக் கொண்டு வேலையில் இறங்கிவிட்டான் வந்தவன்.

பலர் செய்யக்கூடிய வேலையை இந்த ஒரே ஒரு கூலியாள் மளமள வென்று செய்து முடித்தே விட்டான்.

குட்டை நொடிப் பொழுதிலே அழகிய தடாகமாகியது. மீன்கள் துள்ளின. தாமரை மலர்ந்தது.

கூலி நெல்லை எடுத்து வரப்போன நந்தன், திரும்பி வந்து நெல்லை அளக்கத் தொடங்கினன். ஆனால் கூலி பெறுவதற்கு வந்தவன் மாயமாய் மறைந்து போனான். அவன் யார்? சாக்ஷாத் விநாயகமூர்த்தி.

இன்றும் திருப்புன்கூரில் பின்புறத்துக் கோபுரத்தை அடுத்துப் 'பிள்ளையார் குளம்' சோலைகள் சூழ விளங்குகிறது. இறைவனது திருக்கைகளினால் அழகு பெற்றது அந்த அற்புதக் குளம். தாமே வலிய வந்து பணி செய்வதற்குக் காத்து நிற்கிறார் விநாயகப் பெருமான் என்பதற்கு இதைவிட வேறு சான்று வேண்டுமா ?

இவை முன்பு நடந்தவை. இன்று நமக்குப் பலன் அளிப்பவை.

அடியார்களை எப்படியெல்லாம் தடுத்தாட்கொள்கிறார் என்பதற்கு முன் சொன்னவை மட்டுமின்றிப் பல சம்பவங்கள் உண்டு. மகாராஷ்டிரத்திலே ஷோடச கணபதி ஸ்தலங்கள் பிரசித்தம். விநாயக சதுர்த்தியைப் பதினறு நாட்கள் கொண்டாடி அனந்த சதுர்த்தசியன்று வழியனுப்புவர். ஸ்ரீ மகாபக்த விஜயத்திலே அன்புடன் உடன் அமர்ந்து உண்ணும் விநாயகர் பாதிச் சாப்பாட்டிலே எழுந்து போய்க் கடலிலே மூழ்கவிருந்த தம் பக்தனைக் கரையேற்றிவிட்டு ஈர வஸ்திரத்துடன் உண்ட சரித்திரம் மிகவும் பிரசித்தம். தமிழ் நாட்டிலே ஒரு மந்திரி. அரசனது ஆணைப்படியே பிரம்மாண்டமான கோயிலும் கோபுரமும் எழுப்புகிறார். கட்டட நிர்வாகப் பொறுப்பை ஏற்ற மந்திரி கணக்குகளைச் சரியாக வைக்காமல் அசட்டையாக இருந்து விடுகிறார். அவர் மந்திரி. அரசர் பார்வையிட வந்தாயிற்று. கணக்குகளை எடுத்து வரும்படி கட்டளையும் வந்தது. சபையோர் கோபுரத்தின் பெருமை, கோயிலின் சிற்பச் செல்வங்கள், அவை அமைந்துள்ள அழகு இவற்றையே பேசிப் பேசிப் புகழ்ந்தும் மகிழ்ந்தும் அமர்ந்திருந்த சமயம்.

கணக்கு வைக்காத மெய்யடியார் தனியாய்த் தவித்துப் போனார். 'அடாடா! மதி மோசம் போனேனே? கோயில் கைங்கரியம் என்றாலும் கணக்கு வைக்காதது தவறு தானே ! வானை அளாவி நிற்கும் கோபுரம் கணக்குச் சொல்லுமா ? தண்டனையை ஏற்க வேண்டியதுதான்' என்று முடிவு செய்தார். காவலர்களும் கை விலங்கும் கண் முன்னே தோன்றின அந்த விநாயகப் பக்தருக்கு. பூஜை அறையிலே கண் மூடி மௌனியாய்த் தியானத்திலே அமர்ந்தார்.

அங்கே சபையோர் பக்தரது வருகைக்காக வழி மேல் விழியாய்க் காத்து நின்றனர். ஓர் அழகிய இளைஞன். பிரம்மசாரி. கட்டுக் குடுமி. காதிலே கடுக்கன். நெற்றியிலே மெல்லிய மஞ்சள் நிறமான சந்தனக் கீற்று. அதன் நடுவே குங்குமப் பொட்டு. கையிலே கணக்குச் சுவடிகள் கட்டிய பட்டுத் துணி. புன்னகை தவழும் முகம். அவனது அழகிய தோற்றத்தைக் கண்டு வைத்த கண் வாங்காமல் அவனையே பார்த்தனர். அவனே மிகுந்த பணிவுடன் அரசனை வணங்கிக் கை கட்டி வாய் புதைத்து, ''அடியேன் மந்திரியாரது கணக்குப்பிள்ளை. அவர் கட்டளைப்படி கணக்குகளைக் கொண்டு வந்திருக்கிறேன். அவர் பல்லக்கிலே வந்து கொண்டிருக்கிறார்'' என்றான்.

அரசன் அவனை ஏற இறங்க ஒரு முறை பார்த்தான். ''சரி, சுவடியை எடுத்துப் படிக்கலாம்'' என்றான். இளைஞனது கண்கள் ஒரு முறை சுழன்று மீண்டன. மிகவும் வணக்கத்துடன் கூடிய இனிய குரலில், முதலில் சொல்ல வேண்டிய மங்கல வாசகங்களைச் சொல்லிச் சற்றே நிறுத்தி, ''எத்து நூல் எண்ணாயிரம் பொன்'' என்றான். அரசன் திகைத்துப் போனான். ஒன்பது நிலைக் கோபுரங்கள் நான்குடனும் பல சிறு கோபுரங்களுடனும் கூடிய ஆலயம் கண் முன்னே நின்றது. கற்களை ஒழுங்கு செய்து அளவு பிடிக்கும் நூல் தான் எத்து நூல். கணக்கிலே மிகச் சிறிய தொகைதான் எத்து நூல் வாங்குவது. இந்தப் பிரம்மாண்டமான கோயில் கணக்கிலே எத்து நூல் மட்டுமே எண்ணாயிரம் பொன் ஆனால் மற்றச் செலவுகளை எத்தனை பொன் என்று கேட்க வேணுமா? 'போதும், சுவடியைக் கட்டலாம்' என்றான் அரசன். இளைஞன் புன்னகையுடன் சுவடியைக் கட்டலானான்.

இளைஞன் எழுந்து சில அடிகள் செல்லவும் மந்திரியார் மிகுந்த வேகத்துடன் சபாமண்டபத்தில் நுழையவும் சரியாயிருந்தது. அரசன் சிம்மாசனத்திலிருந்து பத்தடி முன் வந்து மந்திரியாரைத் தழுவிக் கொண்டான். அந்த ஆனந்தக் காட்சியைக் கண்ட சபையோர் திரும்பி இளைஞனை நோக்க அவன் அந்த வாசலின் வழியே மறைந்தே போனான்.

*   *   *

இப்படி அன்பருக்காக எத்தனை எத்தனையோ அன்புச் செயல்களைச் செய்பவர், நாம் செறுக்குற்றால் சீறி எழுந்து விக்கினமும் செய்வார். தம்மை முன் நினைத்துத் தொடங்கவில்லை என்ற காரணத்தால் திரிபுரஸம்ஹாரத்துக்கு இறைவன் செல்கையில் முழுமுதற் கடவுள் தேர் அச்சு இற்று முறியுமாறு செய்தார். அவ்விடமே அச்சிறு பாக்கம் என்பர். இதை அருணகிரிப் பெருமான் மிக மிக அழகாக,

முப்புரம் எரிசெய்த அச்சிவன் உறைரதம்
அச்சது பொடி செய்த அதிதீரா!

என்று போற்றுகிறார். இத்தகைய பேரருள் பிழம்பை ஞான விநாயகனை நாமும்,

வானுலகும் மண்ணுலகும் வாழ மறை வாழ
பான்மை தரு செய்ய தமிழ் பார்மிசை விளங்க
ஞானமத ஐந்துகர மூன்றுவிழி நால்வாய்
ஆனைமுகனைப் பரவி அஞ்சலி செய்திடுவோம்.

அட்டைப்படத்தில் வேழமுகனை நாம் தரிசிக்கச் செய்பவர்: மணியம் செல்வன்.

# அத்தியாயம் 20

இன்ஸ்பெக்டர் ஏகாம்பரத்தின் விசாரணைக்கு உட்பட வேண்டிய வர்கள் அடுத்ததாகச் சேகரும், மஞ்சுளாவும்தாம். இன்ஸ்பெக்டரின் கவனம் சேகரின் பக்கம் திரும்பியது.

'' திராட்சைக் கொடி வீட்டுக்கு நீங்கள் போக நேர்ந்த சூழ்நிலையை

# சுழிக்காற்று



யும் அங்கு இரு உடல்களைக் கண்டு பிடித்தது எப்படி என்பதையும் பற்றி நீங்கள் கொடுத்த தகவல்கள் எனக்கு அத்தனை திருப்தி அளிப்பதாக இல்லை, மிஸ்டர் சேகர்' உங்கள் நண்பன் கோபாலைக் கல்லறைப் பகுதியில் மோதித் தள்ளி விட்டு யாரோ ஓடிய தாகவும், அங்கு ஆராயப் போன உங்களுக்கு ஒரு சாவிக் கொத்து கிடைத்ததாகவும் கூறினீர்கள். அதில் ஒரு சாவி அந்த மர்ம வீட்டின் பூட்டைத் திறக்க அதைத் தொடர்ந்து இத்தனை சம்பவங்கள் நடந்திருக்கின்றன....''

''உண்மைதான். ராமுவின் சடலத்தோடு இருந்த மூவாயிரம் ரூபாய்களுக்கும் அதிகமான பணத்தை-நோட்டுக்களாக — எடுத்துப் பத்திரப் படுத்திக்கொண்டிருக்கிறீர்கள் இல்லையா, மிஸ்டர் ஏகாம்பரம் ?''

இன்ஸ்பெக்டருக்குத் தூக்கி வாரிப் போட்டது. ''அது எப்படி உங்களுக்குத் தெரிந்தது?'' என்று கேட்டார்.

'' ராமுவைக் கொலை செய்தவன் ரொம்பத் திறமைசாலி, முன் யோசனைக்காரனும் கூட. ராமுவிடம் இருந்த



பணத்தை எடுத்துப் போய் அவன் அதைச் செலவழித்திருப்பானானால் அந்தப் பணமே தன்னைக் காட்டிக் கொடுத்துவிடும் என்பதை அவன் அறிவான். ஆகவேதான் கொலையுண்டவளே அந்தப் பணத்தை வைத்திருக்கட்டும் என்று விட்டுச் சென்றிருக்கிறான். நர்ஸ் நிர்மலாவின் உடலோடும் பல நூறு ரூபாய்க்கு நோட்டுக் கட்டுக்களாக இருந்திருக்குமே. அதையும் கைப்பற்றி யிருக்கிறீர்களா மிஸ்டர் இன்ஸ்பெக்டர்?'' என்று கேட்டான் சேகர்.

இன்ஸ்பெக்டர் ஏகாம்பரத்தின் முகத்தில் இப்போது கடுகடுப்புக் கூடியது. ''மிஸ்டர், சேகர்! கேள்விகளைக் கேட்க வேண்டியவன் நான்'' என்றார்.

''ராமுவைக் கொன்ற அதே கொலைகாரன் தான் நிர்மலாவின் பணத்தையும் அதே காரணத்துக்காக அவள் உடலோடு விட்டுச் சென்றிருக்கிறான்.'' ஏகாம்பரத்தின் எரிச்சலைப் பொருட்படுத்தாமல் சேகர் சொல்லிக் கொண்டு போகிறான். ''ஆனால் ஒரு வித்தியாசம். நிர்மலாவின் டம்பப் பையிலிருந்த பணத்தை எடுத்து அவள் அணிந்திருந்த 'ஓவர்கோட்'டின் ஸைட் பாக்கெட்டில் திணித்து விட்டுப் போயிருக்கிறான். ஏனென்றால், நிர்மலாவைக் கொன்ற பழியைப் பிறர் மீது சுமத்துவதற்கு ஏற்ற தடையமாயிற்றே அந்தப் பை. அதைக் கொண்டு டாக்ஸி டிரைவர் காளியப்பனைச் சுலபமாகக் குற்றவாளியாக்கலாம் பாருங்கள்.''

''இன்றிரவு காளியப்பன் எப்படி எதற்காக முல்லைவாசல் :பண்ணைக்கு வந்தான்? அவன் இங்கு



# கௌசிகன்

everest/116g/ACW tam

# இருமலா? போய்விட்டதே!

விரைவாகச்
செயல் புரிவது
இன்சுவையுள்ளது
சிக்கனமானது

**க்ளைகோடின்** இருமலிலிருந்து பூரண நிவாரணமளிக்கிறது 4 வழிகளில்:

**முளையில்**—இருமல் கேந்திரத்தைக் கட்டுப்படுத்துகிறது.

**தொண்டையில்**—சளி அடைப்பை அகற்றி எரிச்சலைச் சமனப்படுத்துகிறது.

**மார்பில்**—இறுகிய தசைநார்களுக்கு இதமளித்து சுலபமாக சுவாசிக்க உதவுகிறது.

**நுரையீல்களில்**—அடைத்துக் கொண்டிருக்கும் சளியையும், கோழையையும் தளர்த்துகிறது.






Alembic **க்ளைகோடின்**

டெர்ப் வசாகா

**பூரண இருமல் கட்டுப்பாட்டுக்கு க்ளைகோடினுக்கு, இணை எதுவுமில்லை!**

**இருமல்களுக்கு, இந்தியாவில் மிக அதிகமாக விற்பனையாகும் வீட்டு நிவாரணி!**

வந்திருக்கிறான் என்பதை மறுக்க முடியாது. ஏனென்றால், அவனுடைய சாவிக் கொத்து இங்கு கண்டெடுக்கப்பட்டிருப்பதிலிருந்து அது ஊர்ஜிதமாகிறது. இதற்கான விளக்கங்களை நான் உங்களிடம் கேட்கத்தான் வேண்டும், மிஸ்டர் சேகர். ஆனால் இப்போது நான் உங்களை ஏதும் கேட்கப் போவதில்லை. இந்த விவகாரங்களைப் பற்றிய ஒரு துல்லியமான சாட்சியை அதன் ஆரம்பத்தின் ஆரம்பத்திலிருந்தே பெற்றாக வேண்டும். எனக்கு அப்படிப்பட்டதொரு விளக்கத்தை நீங்கள் வழங்குவீர்கள் என்றும் நம்புகிறேன்'' என்ற இன்ஸ்பெக்டரின் பேச்சில் தொடக்கத்திலிருந்த சிடுசிடுப்பின் சிக்கல் வர வர விடுவிக்கப்பட்டதாக இருந்தது.

''ஓரளவுக்குக் குழப்பமில்லாத நியாயமான — ஆனால் முற்றுப் பெறாத தகவல்களைத்தான் உங்களுக்கு என்னால் தர முடியும். அதில் நீங்கள் நினைப்பது போலக் காளியப்பன் குற்றவாளியாக இருக்கமாட்டான். நிர்மலா எங்களிடம் கூறியவைகளை உண்மையாக எடுத்துக் கொண்டால், ராமு புயல் வீசிய அன்று இரவு இந்த வீட்டின் உள்ளேயோ அல்லது இவ்வீட்டுக்கு மிக மிக அருகே வெளியேயோ கொல்லப்பட்டிருக்கிறான். எப்படி? முதலில் பலமாகத் தாக்கி, அடித்து — மூர்ச்சையடையச் செய்து பிறகு அதே நிலையில் அவன் முகத்தில் கனமான துணியை வைத்து அழுத்தி மூச்சுத் திணறி இறக்கும்படி செய்யப்பட்டிருக்கிறான்.

''தன் காதலனுக்கு ஏற்பட்ட இத்தகைய முடிவு பற்றி நிர்மலாவுக்கு ஏதும் தெரியாது. அவன் கொல்லப்பட்ட வேளையில் அவள் தன் படுக்கையில் மயக்க நிலையில் கிடந்திருக்கிறாள். பெரியவர் தர்மலிங்கமோ அவரது மூத்த மகன் கந்தசாமி அவர்களோ இத்தகைய ஒரு கொலையைச் செய்யுமளவுக்கு உடல் நலமில்லாதவர்கள்; பலமற்றவர்கள். இந்தக் குடும்பத்தைச் சேர்ந்த ஆனால் பல வருஷங்களாகத் தொடர்பற்ற மஞ்சுளாவின் சித்தப்பா வீராசாமி அவர்கள் சமீப காலமாக இங்கு வந்து போகிறாராம். ஒரு வேளை அவருக்கும் இக்கொலைக்கும் தொடர்பிருக்கும் என்று நீங்கள் சந்தேகிக்கிறீர்களா மிஸ்டர் ஏகாம்பரம்?''

''இல்லை.....''

''சரி.... அப்படியானால்? மேலே போவோம். இவ்வீட்டின் நிர்வாகத்தைக் கவனித்து வரும் மஞ்சுளாவின் சித்தி கோகிலா கூறினார்கள்: 'ராமு டிராக்டர் விற்ற பணத்தோடு எங்கோ ஓடிப் போய் ஒளிந்து கொண்டிருக்கிறான்' என்று. ஆகவே, ராமு இறந்து போய் மூன்று வாரங்களுக்கு மேலாகிறது என்ற உண்மை அவர்களுக்குத் தெரியவில்லை. அடுத்து அவர்களது தங்கை லலிதா. தன்னால் மிகவும் விரும்பி நேசிக்கப்பட்ட ஒருவனது கொலையைப் பற்றிய ரகசியத்தை எந்த இளம் பெண்ணினாலும் இத்தனை நாட்கள் மூடிவைக்க முடியாது. ஆகவே, லலிதாவுக்கும் ராமு கொலையுண்டதோ அல்லது அவனைக் கொன்றது யார் என்றோ தெரியாது. இவர்களைத் தவிர இங்கிருப்பவர்கள் வேலப்பனும் அவன் மனைவி காவேரியும் வேறு சில பண்ணை வேலைக்காரர்களும்தான்..... ஆனால் நான் நினைக்கிறேன். இவர்களில் யாருமே கொலையாளி இல்லை. கொலை செய்தவன் பிறருக்கு அதைப் பற்றி ஏதுமே தெரியாதவகையில்; தான் ஒருவனே அறிந்த ரகசியமாக அந்தக் கொலையைச் செய்திருக்க வேண்டும்.

''ராமுவின் உடல் இருக்கும் நிலை, புயல் உக்கிரமாக வீசிக் கொண்டிருந்த வேளையில்தான் அவன் புதைக்கப்பட்டிருக்க வேண்டும் என்பதைத் தெரிவிக்கிறது. நல்ல உறுதியான சிமிண்டித் தளம் பெயர்க்கப் பட்டிருக்கிறது. திராட்சைக் கொடி வீட்டின் நிலவறையில். சாதாரண நாட்களில் அங்கு அத்தனை பெரிய பள்ளம் தோண்டுவதானால் ஏற்படும் சத்தத்தை மூடி மறைக்க முடியாது. இடி, மின்னல், பெருமழை, பேய்க் காற்று ஆகிய இயற்கையின் ஆர்ப்பாட்டங்களைப் போர்வையாகக் கொண்டு அந்தத் தளம் பெயர்க்கும் வேலை நடந்திருக்கிறது. புயலின் பேரிரைச்சலில் கொலைகாரனின் கொத்து வேலைச் சத்தம் அமுங்கிப் போய் விட்டது.

''குழி பறித்தாயிற்று. புதிய சிமிண்டிக் கலவைக்கு மணலைக்கூடப் பயன்படுத்தவில்லை. தோண்டி எடுத்த மண்ணையே உபயோகித்திருக்கிறான். உயிர் இழந்த ராமுவின் சடலத்தைக் குழிக்குள் கிடத்தி அவன் மீது புதிய தளம் போடப் பட்டிருக்கிறது. உங்கள் இலாகாவின் துப்பறியும் பிரிவைச் சேர்ந்த துரைசாமி அவர்கள் பின்னால் ராமுவைத் தேடி அலைந்தபோது இந்தத் திராட்சைக் கொடி வீட்டை அதன் பாழடைந்த ஜன்னல் வழியாகப் பார்த்து விட்டு ஏதுமில்லை என்று திருப்திப்பட்டுப் போயிருக்கிறார். தோண்டி எடுக்கப்பட்ட மண் — தளத்துக்குப் பயன்பட்டது போகப் பாக்கி புயல் ஓய்ந்த மறு நாள் காலை அப்புறப் படுத்தப்பட்டிருக்கிறது. அதைப் பிறர் சந்தேகிக்காதபடி மறைப்பதற்கு

ஏற்ற வசதியான இடம் அந்த வீட்டின் அருகில் இருக்கும் ஒரு குட்டை. அதில் அந்த மண்ணைக் கொண்டு கொட்டியிருக்கிறான் கொலைகாரன். மஞ்சுளா, அன்று நாம் பார்த்தோமே, 'டூல் ஹவுஸ்' போன்ற அறை. அங்கு அவசர காலத் தேவைக்காக அதிகப்படியான பூட்டுக்களும் சில இருக்கின்றன இல்லையா?''


''மணமகள் தேவை என்று விளம்பரம் கொடுத்தது நீங்கள் தானே?''

''இருக்கின்றன .....'' என்றாள் மஞ்சுளா.

''இத்தனை காரியங்களைத் திட்டமிட்டுச் செய்தவனுக்கு அந்த வீட்டின் பூட்டை மாற்றவா தெரியாது?

''மறு நாள் திராட்சைக் கொடி வீடு வேறு பூட்டினால் பூட்டப்பட்டது. பிறகு கோகிலாவினால் அதன் உடைந்த ஜன்னல்களும் பலகைகளைக் கொண்டு இறுக்கப்பட்டன. அதன் பிறகு மூன்று வாரங்கள் ராமு மறைந்தது மர்மமாகவே இருந்தது. அவன் மறைவுக்கான தடயங்கள் ஏதும் கிடைக்கவில்லை. நீங்கள் மேற்கொண்ட முயற்சிகளும் பயன் அளிக்காமல் கைவிடப்பட்டன. இந்த நிலையில்தான் நிர்மலாவின் சகோதரன் பாலு விடுமுறையில் ஊருக்கு வந்திருக்கிறான் — ராமுவைத் தேடிப் பார்க்க வேண்டும் என்ற எண்ணத்துடன். மிஸ்டர் ஏகாம்பரம் உங்களால் அணுக முடியாததொரு முனையின் மிக மிக அருகே பாலு போயிருக்கிறான்.

''சாமுண்டிக் கோட்டைக்கும் முல்லைவாசலுக்கும் இடையே ஏதோ ஓர் இடத்தில்தான் ராமு காணாமல் போயிருக்க வேண்டும் என்ற கருத்தை நீங்கள் ஏற்கவில்லை; இல்லையா இன்ஸ்பெக்டர்? ஆனால் நிர்மலாவின் அண்ணா பாலுவோ தன் சகோதரி கூறிய விஷயங்களை அப்படியே ஏற்றுக் கொண்டு சிந்தித்திருக்கிறான். அதன் முடிவு, முல்லைவாசலுக்குள்ளேயேதான் எங்கோ காணாமல் போயிருக்க வேண்டும் என்று நிர்மானித்திருக்கிறான். அதுவும் திராட்சைக் கொடி வீடு ஒன்றுதான் ராமுவைப் பற்றிய தகவலைத் தரக் கூடிய குறிப்பான இடம் என்ற முடிவுக்கும் வந்திருக்கிறான். ஏனென்றால் நிர்மலாவின் கூற்றுப்படி கடைசியாக ராமு காணப்பட்ட இடத்துக்கு அருகில் இருப்பது திராட்சைக் கொடி வீடுதான்!''

இன்ஸ்பெக்டர் ஏகாம்பரம், மஞ்சுளா, கோபால், துரைசாமி அத்தனை பேரும் அசைவற்று ஆர்வத்துடனும் வியப்புடனும் சேகரின் விளக்கங்களைக் கேட்டுக் கொண்டிருந்தார்கள்.

சேகர் தொடர்ந்தான்:

''திராட்சைக் கொடி வீட்டின் ஜன்னல்களெல்லாம் கள்ளிப் பலகைகளைக் குறுக்கும் நெடுக்குமாக வைத்து ஆணிகளைக் கொண்டு அறைந்து மூடப்பட்டிருப்பதுதான் உங்களுக்கெல்லாம் தெரியும். அப்படிப்பட்ட ஜன்னல்கள் ஒன்றின் நான்கு பலகைகளை லாகவமாக அப்புறப்படுத்தி அதன் மூலம் பாலு உள்ளே நுழைந்திருக்கிறான் — அந்த வீட்டைச் சோதனையிட. ஆனால் அவனுக்கு முன்னால், ஒரு மனிதன் அங்கு அவன் உள்ளே நுழைய முயன்றதைக் கண்டு, அவனுக்குத் தெரியாமல், பிரதான வாசல் கதவு வழியாகவே — அவனிடம் அதன் சாவி இருந்தது — உள்ளே நுழைந்து காத்திருப்பது பாலுவுக்குத் தெரியாது. இருளோடு இருளாகப் பாலுவின் உடல் உள்ளே அடி எடுத்து வைப்பதை எதிர்பார்த்துக் கொண்டு காத்திருந்தது அந்த உருவம். அவன்தான் ராமுவைக் கொன்ற கொலைகாரன்!''

''ஆ....'' என்ற வியப்பொலி எழுந்தது மஞ்சுவிடமிருந்து.

''பாலு அங்கேயே அப்பொழுதே கொல்லப்பட்டான், இல்லையா மிஸ்டர் சேகர்?'' இன்ஸ்பெக்டர் ஏகாம்பரம் கேட்டார். ஆனால் சேகர் பதில் கூறு முன் அவரே தொடர்ந்தார்.

''இன்னொன்றையும் உங்களுக்கு நினைவுபடுத்த விரும்புகிறேன், புரொபஸர் சேகர்! கனியப்பன் பாலுவை முல்லைவாசல் எல்லை வரை கொண்டு வந்ததோடு மட்டுமல்ல, பாலு அங்கு அந்த வேளையில் எதற்காக வருகிறான் என்ற ரகசியத்தையும் அறிந்திருந்தான்.''

''ஆகவே...'' என்ற சேகரிடம்... ''மறைந்திருந்த மனிதன் யார் என்பதை நான் சொல்லவா வேண்டும்?'' என்று கேட்டார் இன்ஸ்பெக்டர்.

திராட்சைக் கொடி வீட்டின் நிலவறையிலிருந்த இரு சடலங்களையும் பற்றி இன்ஸ்பெக்டர், அது யாரால், எப்படி, எப்போது கொலை செய்யப்பட்டிருக்க வேண்டும் என்பதற்கு ஓர் உருவம் கொடுத்து விவரித்ததும் சேகர் கேட்டான்:

# விஜிபி

## மக்களின் வாழ்க்கைத் தரத்தை புரட்சிகரமான மாற்றத்துடன் சிறப்பிக்க உதவுகிறார்கள்

விஜிபி யின் கலபத்தவணைத் திட்டத்தின் மூலம் வாழ்க்கைக்குத் தேவையான பல பொருட்களை, சிக்கனமாக, வசதியாக வாங்கலாம். குறைந்த வருவாயிலும் நிறைந்த வாழ்வை பெறுங்கள்

**வி. ஜி. பன்னீர்தாஸ் & கோ**

விஜிபி பில்டிங்கஸ்

சைதாப்பேட்டை, சென்னை-15 போன் : 442333

தி. நகர், சென்னை-17 போன் : 440246

சத்தன் பஜார், சென்னை-3 போன் : 33214

விக்டரி ஹவுஸ், 7, மவுண்ட்ரோடு சென்னை-2.
போன் : 812121

**வி. ஜி. பன்னீர்தாஸ் & கோ**

விஜிபி சதுக்கம், சைதாப்பேட்டை, சென்னை-15

சென்னை, செங்கல்பட்டு, வட ஆற்காடு, தென் ஆற்காடு மாவட்டங்களில் வசிப்பவர்கள் இந்த கூப்பனை பூர்த்தி செய்து மேற்கண்ட முகவரிக்கு அனுப்பினால், எங்கள் பிரதிநிதி உங்களிடம் வந்து எமது கலபத் தவணை திட்டத்தின் மூலம் பொருள்கள் வாங்க உதவுவார்.

பெயர் ______________________

முகவரி ______________________

______________________

______________________

VGP விஜிபி தரமான பொருட்களின் இந்தியாவின் மிகப்பெரிய விற்பனையாளர்கள்

murphy VGP Godrej RIVEX ROBIN HOOD CAMY ALLWYN Racold Hercules NIPPON TIMESTAR Sunset Vijay Relifan RALEIGH MERRITT

NAS-212

விஜிபி | புதிய ஷோரூம் | விக்டரி ஹவுஸ், 7, மவுண்ட் ரோடு, சென்னை-2 போன் : 812121

**இவரிடமிருப்பது பிரஸ்டிஜ Prestige இவரிடமிருப்பது ப்ரீத் PREETT**



இவர் இருப்பது இந்தியாவில்.



இவர் இருப்பது வெளிநாட்டில்

# இருவரும் உபயோகிப்பது
# ஒரே பிரஷர் குக்கர்தான்
# இரண்டுமே டிடி. (பிரைவேட்) லிமிடெட் தயாரிப்புதான்
# – பெயர் மட்டுமே வித்தியாசம்

இந்தியாவில் பிரஸ்டிஜ் என்றும், ஏற்றுமதிக்கு ப்ரீத் என்றும் தயாரிக்கப்படும் இரண்டு குக்கர்களும் எல்லாவகையிலும் ஒன்றுதான். எட்டு லட்சத்திற்கும் அதிகமான குடும்பத் தலைவிகள் இவற்றை நாள்தோறும், ஆண்டுக்கணக்கில் பயன்படுத்துகிறார்கள்.

உங்கள் பிரஷர் குக்கர் பிரஸ்டிஜானாலும் சரி, ப்ரீத்தானாலும் சரி அவை பயன்படுத்தப் பத்திரமானது. ஆயுள்கால உத்தரவாதம் கொண்டது. நாடெங்கும் விற்பனைக்குப் பின்னரும் பராமரிப்புக்கு வசதியுள்ள பிரஷர் குக்கர் இது ஒன்றே.

சீக்கிரமாயும் சுலபமாயும் சமைக்க உதவுபவை, ப்ரீத் 'ஸ்டீம்-இட்', ஸ்கில்லெட், ஸாஸ்பான் பாத்திரங்கள்.

HTA.TTP-3891




டிடி. (பிரைவேட்) லிமிடெட், பெங்களூர் 16

"பாலு நிலவறையில் உள்ள மர்மத்தை அறியு முன்னே அதாவது வரவேற்பறையில் நுழைந்ததுமே அங்கேயே கொலை செய்யப்பட்டான் என்று நீங்கள் நம்புகிறீர்களா? பாலு கொலை செய்யப்பட்டது தன் சகோதரியின் காதலனான ராமுவின் இறந்த உடலைக் கண்டதினாலா அல்லது அவன் அந்த உடலைப் பார்த்து விடலாம் என்ற பயத்தின் மீது ஏற்பட்ட விளைவா அது? பாலுவின் பார்வையில் ராமுவுக்கு ஏற்பட்ட முடிவின் பயங்கரம் தட்டுப் படாமலும் இருந்திருக்கலாம் அல்லவா? ஏதோ ஒரு சந்தேகத்தின் மீது சோதனையிடுவதற்காக அங்கு வந்த பாலுவிடம் கொலைகாரன் இப்படியொரு விஷப் பரீட்சையை நடத்திப் பார்க்க விரும்பவில்லை. அதற்கு மாறாகப் பாலு கொடி வீட்டினுள் நுழைந்த மறு கணமே அவனைத் தாக்கிக் கொன்று விட்டிருக்கிறான். இது ஏன்......?"

"தன் ரகசியம், வெளியாகி விடப் போகிறதே என்ற பதற்றம், பரபரப்பு. பாலுவை உடனே ஒழித்துவிட வேண்டும் என்ற முடிவை அவனுள் ஏற்படுத்தி விட்டிருக்கிறது. அவசர அவசரமாகக் கொலை செய்திருக்கிறான். அவ்வளவுதான்" என்றார் இன்ஸ்பெக்டர்.

"அவசரம்தான்! இல்லாவிட்டால் அவனால் கொலை செய்திருக்க முடியாது. ராமுவின் உடலைக் கண்டுபிடித்து அதன் அருகிலேயே பாலு இருந்தால்கூடக் கொலைகாரனுக்குப் பாலுவைக் கொன்றுவிட வேண்டும் என்ற ஒரு வெறி, ஆத்திரம் வந்திருக்காது தான்."

"பின், ஏன் எப்படி, எதற்காகக் கொலைகாரன் பாலுவைக் கொன்றான் என்கிறீர்கள்?"

"உங்களுக்கு அப்பட்டமான உண்மைகள்தான் தேவை, அனுமானங்கள் அல்ல. அப்படித்தானே?"

"ஆமாம். ஆனால் என் வரையில் உண்மை இதுதான் — பாலு மிகத் துரிதமாக எவ்விதப் போராட்டத்துக்கும் இடம் கொடுக்காமல் கொல்லப்பட்டிருக்கிறான். அத்தகையதொரு வாய்ப்பு காளியப்பனுக்குக் கிடைத்திருக்கிறது. ஆனால் நீங்கள் சொல்லும் பாதைதான் எனக்குப் புதிராக இருக்கிறது....."



"நேற்றுத்தான் சம்பளம் வாங்கினேன். இன்று அதற்குள் என்னிடம் கைமாற்றுக் கேட்கிறாயே!"

"நீ என்னிடம் கைமாற்றுக் கேட்பதற்குள் நான் முந்திக் கொள்ள வேண்டாமா?"

ஒரு சில விநாடிகள் சேகர் இன்ஸ்பெக்டரின் முகத்தையே மௌனமாகப் பார்த்துக் கொண்டிருந்தான். அவன் இதழ்களில் முறுவல் பூத்தது. பிறகு, "திராட்சைக் கொடி வீட்டின் நிலவறையில் நடத்தப்பட்ட இரண்டாவது சவ அடக்கம் அதிகாலைக்குச் சற்று முன்னால் - அதாவது நீங்கள்காளியப்பனைக் கைது செய்வதற்கான முஸ்திபுகளில் இறங்கி வெகுநேரத்துக்குப் பிறகு நடந்திருக்கிறது" என்றான்.

"அது எப்படி உங்களுக்குத் தெரியும்?"

"கை வண்டியின் கிரீச்சொலியை நான் கேட்டது அந்த வேளையில்தான்."

"எந்தக் கை வண்டி.....?"

"கொலைசெய்யப்பட்ட நர்ஸ் நிர்மலாவின் உடலையும் ஒரு மூட்டை சிமெண்டையும் திராட்சைக் கொடி வீட்டுக்கு எடுத்துச் செல்ல, அந்த மேட்டுப் பகுதிக்கு ஏற, எந்த வண்டி உபயோகிக்கப்பட்டதோ அந்த 'வீல் பாரோ' வண்டி!"

"அதிகாலை எத்தனை மணிக்கு என்பதை உங்களால் நிச்சயமாகச் சொல்ல முடியுமா? கொலைகாரன்தான் அந்தக் கை வண்டியைப் பயன்படுத்தினான் என்பதையாவது உறுதியாகச் சொல்ல முடியுமா, உங்களால்?"

"முடியாது...." ஒப்புக் கொண்டான் சேகர். "ஆனால் ஒன்று மட்டும் நிச்சயமாகச் சொல்ல முடியும். நீங்கள் போலீஸ் ஸ்டேஷனில் காளியப்பனை வளைத்துப் போட்டு விசாரணை நடத்திக் கொண்டிருந்த அதே நேரத்தில்தான் கொலைகாரன் இந்தக் காரியத்தை இங்கே நடத்தி யிருக்கிறான். இதில் எனக்குக் கொஞ்சமும் சந்தேகமில்லை. பண்ணையின் விசுவாசமான வேலைக்காரன் வேலப்பனின் வாக்குப்படி அந்தக் கை வண்டியின் 'கிரீச்' ஒலி இன்னொரு இரவிலும் கேட்டிருக்கிறது. அதாவது பெரும் புயலடித்ததே அன்றிரவுக்கு அடுத்த நாள், ராமு கொலை செய்யப்பட்டுப் புதைக்கப்பட்டதைத் தொடர்ந்து இருபத்தி நான்கு மணி நேரத்துக்குப் பிறகு அந்தக் கைவண்டியின் 'கிரீச் கிரீச்' ஒலி கேட்டிருக்கிறது. இரவின் பிற்பகுதியில் — அதிகாலை வேளைக்குச் சற்று முன்னால் — அந்தக் 'கிரீச்' ஒலி எழுப்பும் கைவண்டி மூன்று

தடவைகள் பயன்படுத்தப்பட்டிருக்கின்றது. ஒவ்வொரு தடவையும் அது திராட்சைக் கொடி வீட்டுக்கு இழுத்துச் செல்லப்பட்டுத் திரும்பி யிருக்கிறது. முதல் தடவை அது பயன்படுத்தப்பட்டது, மூன்று வாரமும் ஒரு நாளைக்கும் (22 நாட்கள்) முன்னால். அப்போது அது ராமுவின் உடலையும் ஒரு மூட்டை சிமெண்டையும் தளத்தைப் பெயர்ப்பதற்கான உபகரணங்களையும் ஏற்றிச் சென்றிருக்கிறது. அப்போது அந்த வண்டி எழுப்பிய ஒலியைப் புயலின் சத்தம் அமுக்கி விட்டது. அது யாராலும் கேட்கப்பட வில்லை. மூன்றாவது தடவையாக — நேற்றிரவு அது நிர்மலாவின் உடலையும் இரண்டாவது மூட்டை சிமெண்டையும் ஏற்றிச் சென்றிருக்கிறது. ஆனால் இரண்டாவது தடவை இன்றைக்குச் சரியாக மூன்று வாரங்களுக்கு முன்னால் (21 நாட்கள்) அது சுமந்து சென்றது எதை என்பதுதான் தெரிந்தாக வேண்டும்.''

''புரொபசர் சேகர்! உங்கள் ஊகங்களெல்லாம் ஒரே குழப்பத்தையல்லவா உண்டாக்குகின்றன? தூரத்தே தெரியும் காட்சிகளை மறைக்கும் மூடு பனியைப் போல் ஏதேதோ கற்பனைகளால் உண்மைக்குத் திரையிடுகிறீர்கள் என்று நினைக்கிறேன் நான்.''

சேகருக்குச் சிரிப்புத்தான் வந்தது. அதே சமயம் வாசலில் ஒரு கார் வந்து நிற்கும் சத்தம் கேட்டு மஞ்சுளா எழுந்து போய்க் கதவைத் திறந்தாள். டாக்டர் ஈசுவரன் உள்ளே நுழைந்தார். அவர் முகத்தில் அசதி அப்பிக் கிடந்தது. மஞ்சுளாவிடம் கூறினார். ''மஞ்சு! உன் அப்பாவின் உடலைப் பரிசோதனை செய்து விட்டேன். விஷமிடப்பட்டதற்கான எவ்வித அறிகுறியும் எனக்குக் கிடைக்கவில்லை. கந்தசாமி அவர்கள் உயிர் இழப்பதற்குக் காரணமாக இருந்தது இருதயத்தின் இடது பக்கத்திலிருந்து உடலின் பல பாகங்களுக்கும் பிரிந்து செல்லும் பிரதான இரத்தக் குழாயின் மீது புறப்பட்ட ஒரு கட்டியினால்தான்.''

''சோதனைக்குப் பிறகு உங்கள் முடிவைக் கேட்டதில் எனக்கு ஒரு திருப்தி டாக்டர். சந்தேகத்தில் கிடந்து தவிப்பதைவிட இது எவ்வளவோமேல் இல்லையா?'' என்றாள் மஞ்சுளா.

கைக் குட்டையினால் முகத்தைத் துடைத்தபடியே அங்குள்ள ஒரு நாற்காலியில் அமர்ந்த டாக்டர் ஈசுவரன் கேட்டார். ''அது சரி, மஞ்சு, இப்படியொரு சந்தேகம் உனக்கு ஏற்படுவதற்கான காரணம் என்ன என்றுதான் எனக்கு இன்னும் புரியவில்லை. இறந்ததும் அவர் தோற்றத்தில் ஏதோ மாற்றம் ஏற்பட்டிருப்பதாக நீ நினைத்தாய் இல்லையா? எனக்குத் தெரிந்த வரையில் மூன்று வாரங்களுக்கு முன்பு வரை என் கவனிப்பிலிருந்து வந்திருக்கிறார் உன் அப்பா. அப்போதைக்கு இப்போது அவரிடம் அப்படியொன்றும் பிரமாதமான வித்தியாசத்தைக் காண முடியவில்லை என்னால். அப்படி ஏதாவது இருக்குமானால் அது மிக மிகச் சொற்பமாகத்தான் இருக்கும்.''

மஞ்சுளா பதில் சொல்ல வில்லை. அவள் முகத்தில் ஏனோ திருப்தியும் நிலவவில்லை. காதலியின் உள்ளத்தைப் புரிந்து கொண்டான் சேகர்.

''டாக்டர், காலஞ்சென்ற கந்தசாமி அவர்களிடம் இதைத் தவிர விசேஷமாக, எதையாவது உங்களால் காண முடிந்ததா?'' என்று கேட்டான் சேகர்.

டாக்டர் ஈசுவரன் முகவாயைத் தடவிக் கொண்டார். ''ம்....'' என்று எதையோ நினைவுக்குக் கொண்டு வந்தவராகக் காணப்பட்டார். ஆனால், '' அது அப்படியொன்றும் பிரமாதமாக, குறிப்பிடத் தக்கதில்லை. என்னுடைய கண்காணிப்பிலிருந்து அவர் விடுபடுவதற்கு முன்னால் நான் அவருக்குச் செய்த கடைசிச் சிகிச்சை இடது பக்கக் கழுத்தில் கிளம்பி இருந்த ஒரு கட்டியைக் கீறி மருந்திட்டதுதான், அந்தக் கட்டி அவரை ரொம்பப் பாடு படுத்தி விட்டது '' என்றார்.

எதையோ சொல்வதற்கு நினைத்து ஆனால் எதற்காகவோ தயங்கி அதைத் தவிர்த்து விட்டார் என்பதைப் புரிந்து கொண்ட சேகர் நிதானமாக, ''நான் கூட அவர் கழுத்தில் காஸ் வைத்துப் பிளாஸ்திரி போட்டிருந்த அடையாளத்தைப் பார்த்தேன்'' என்றான்.

''இன்றையச் சோதனையின் போது கூடப் பார்த்தேன். அந்தக் காயம் ஆறவே இல்லை....'' அவர் குரலில் வந்தபோதிருந்த தொய்வு இல்லை. தம் வார்த்தைகளை அப்படியே ஏற்றுக் கொண்டு விட்டதற்கான ஒரு திருப்தி நிலவியது, அவர் சமாதானத்தில். ''ஆனால் கந்தசாமி அவர்களின் மரணத்துக்கு அந்த ஆறாத காயம் மட்டும் காரணம் என்று சொல்லுவதற்கில்லை... அது போகட்டும்....இனி அதைப்பற்றி நான் அதிகமாகக் குழப்பிக் கொள்ள வேண்டாம்'' என்றவர் அந்த விஷயத்திலிருந்து விடுபட நினைத்தவராக இன்ஸ்பெக்டரைப் பார்த்து, ''மிஸ்டர் ஏகாம்பரம், திராட்சைக் கொடி வீட்டில் ஏதோ...'' என்று இழுத்தார்.

(தொடரும்)

# பாலுஸேரி பெனிபிட் சிட் பண்டு
## பிரைவேட் லிமிடெட்

"வீணுவிகார்", 17-A, பிளாக் ரோடு,
ஷண்முகானந்தா ஹாலுக்கு அடுத்தது,
சயான் (கிழக்கு), பம்பாய் 22, D.D.

போன்: 47 14 55 • தபால்பெட்டி: 6759 • தந்தி: 'GROWRICH'

உன்னத சேவையில் 25-வது ஆண்டு ஆரம்பம்
ஏலம் கேட்ட பிறகு டிவிடெண்டு அடையும் வாய்ப்புள்ள கீழ்க்கண்ட

1971 ஆகஸ்டு மாதம் புதிய குருப்புகள்

| குறுகிய காலம்: 25 மாதங்கள் | | | நீண்ட காலம்: 40 மாதங்கள் | | |
|---|---|---|---|---|---|
| சேருவதற்கு கடைசி தேதி: 7-8-1971 | | | சேருவதற்கு கடைசி தேதி: 28-8-1971 | | |
| முதல் ஏலத் தேதி: 8-8-1971 | | | முதல் ஏலத் தேதி: 29-8-1971 | | |
| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
| | ரூ. | ரூ. | | ரூ. | ரூ. |
| B | 100/- | 2,500/- | E | 500/- | 20,000/- |
| C | 50/- | 1,250/- | F | 250/- | 10,000/- |
| F | 25/- | 625/- | | | |
| G | 20/- | 500/- | G | 125/- | 5,000/- |

நீண்ட காலம்: 50 மாதங்கள்—ஏலம் எடுக்காத சீட்டுதாரர்களுக்கு மட்டும் டிவிடெண்டு உண்டு

சேருவதற்கு கடைசி தேதி: 21-8-1971 :: முதல் ஏலத் தேதி: 22-8-1971

| வகுப்பு | தவணை | சீட்டுத் தொகை |
|---|---|---|
| | ரூ. | ரூ. |
| LTA | 100/- | 5,000/- |
| LTB | 50/- | 2,500/- |
| LTD | 20/- | 1,000/- |

வேலை நேரம்: காலை 8 மணி முதல் 10-30 வரை; மாலை 4 மணி முதல் 7-30 வரை

வார விடுமுறை - திங்கட்கிழமை

தலைமை அலுவலகம் & பதிவு செய்யப்பட்ட அலுவலகம்:
"பாலுஸேரி பில்டிங்ஸ்"
3, சிங்கராச்சாரி தெரு, திருவல்லிக்கேணி, தபால் பெட்டி: 414, சென்னை-5
கிளைகள்: பெங்களூர் - கல்கத்தா - புது டெல்லி

இலவச பிரசுரத்திற்கு எழுதுங்கள்

சீட்டுகள் முதுக்குதல்
கம்பெனியின் உரிமையைப் பொறுத்தது




## எமது வெள்ளி விழா ஆண்டு

## எங்கள் சேவை உங்களுக்குத் தேவை

# அவனுக்கென்று ஓர் அப்பீல்!

ஏ.கே.பட்டுசாமி

**தங்கம் விளைவிக்கும் தாமிரவருணி** தீரத்தை விட்டு ஹூக்ளி நதிக் கரையோரமுள்ள கல்கத்தாவில் வசிக்கத் தொடங்கி ஏழாண்டுகள் ஆகின்றன. ஒவ்வொரு நாளும் என் தெய்வத் தமிழ்நாட்டையும், எனக்குப் பிறப்பளித்த அந்தப் புனித மண்ணையும் பற்றிய செய்தி ஏதேனும் உண்டா என்று பேப்பரைப் புரட்டத் தவறியதில்லை.

அதோ எட்டாம் பக்கத்தில் வலக் கோடியில்... பொடி எழுத்துக்களில் ஓர் அரைக் காலம்!... 'மாடியிலிருந்து தள்ளிக் கொலை! திருநெல்வேலி...ஏப்ரல் 19...'

நான் நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டேன்.

'...நகரத்தின் பிரதானமான லாட்ஜிங் ஒன்றின் மேல் மாடியிலிருந்து ரங்கநாதன் (வயது 30) என்ற வாலிபரைத் தள்ளிக் கொலை செய்ததாகக் குற்றம் சாட்டப்பட்ட கபீர் (வயது 28) என்ற வாலிபரின் மேல் தொடரப்பட்டிருந்த வழக்கில் இன்று



நீதிபதி தீர்ப்புக் கூறினார். குற்றவாளிக்கு மரண தண்டனை!...'

எனக்கேற்பட்ட உணர்ச்சியின் அதிர்வுகள் என்னைச் சுற்றிலும் ஒரு நில நடுக்கத்தையே ஏற்படுத்தியிருந்தாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை. செய்தி மேலே தொடர்ந்தது...

'கொலை செய்யப்பட்ட ரங்கநாதத்தின் மனைவி மரகதம், கபீரின் முன்னாள் காதலி என்றும், காதல் தோல்விதான் கொலைக்கு 'மோடிவ்' என்றும் பிராஸிகூஷன் தரப்பில் ருசுவாகியது.

'குற்றவாளி கபீர் எதையுமே மறுக்கவில்லை. 'நான் குற்றவாளி என்பதை ஒப்புக்கொள்கிறேன்' என்று அவர் கொடுத்த முதல் வாக்குமூலத்தைக் கடைசிவரையில் வலியுறுத்திக் கொண்டிருந்தார்...'

நிருபர் தமது கடமையை முடித்துவிட்டார். செய்தியைப் படித்தவனது கடமை?... பத்திரிகையில் அன்றாடம் வெளியாகும் கொலைச் செய்திகளில் ஒன்றாக இதை என்னால் எப்படி ஒதுக்க முடியும்?...

கபீர்! — எனது பாலிய வயதுத் தோழன். அந்த அப்பாவிப் பயலை நினைக்கும் போது அவனது கள்ளமற்ற வெகுளிச் சிரிப்புதானே **கண் முன்னால் நிற்கிறது! புது வெள்ளம் வரும்** போது செங்குழம்பாய் நுங்கும் நுரையுமாக அடித்துக் கொண்டு வருமே தாமிரவருணியில் அந்த வேகம், அந்தச் சிலிர்ப்பு, அந்தத் துடிப்பு எல்லாம் இருக்கும் அவன் பேச்சில், சிரிப்பில், அவன் நடையில்... ஆனால் இவற்றுக்கிடையே இனம் புரியாத ஓர் ஏக்கம். புது வெள்ளத்தில் காகிதக் கப்பலை விட்டு அது மிதக்கும்போது கெக்கலி கொட்டி, அமிழ்ந்து போனதும் கரையில் நின்று அழுமே குழந்தை, அத்தகைய ஏமாற்றம் கலந்த சோகம் அதனுள் இழையோடிக் கொண்டிருந்ததை நான் உணர்ந்திருக்கிறேன்.

நெல்லையிலிருந்து பதினாறு மைல். பாபநாசம் லைனில், சேர்மாதேவிக்கும் பத்தமடைக்கும் அப்பால், காருகுறிச்சிக்கும் கல்லிடைக்குறிச்சிக்கும் இடையில்... ஏதோ ஒரு நல்லூர். ஊர்ப் பெயரைச் சொல்ல மாட்டேன். புரிந்து கொள்ளுங்கள்... ஊருக்கு வெளியே பஸ் ஸ்டாண்ட். பஸ்



ஸ்டாண்டுக்கு நுழையுமுன் 'காந்திமதி டாக்கீஸ்'. பழைய படங்களாகத் திரையிட்டுக் கொண்டிருப்பது அதன் தனி உரிமை.

ஊரின் உள்ளே கன்னடியன் கால்வாய், தாமிரவருணியின் பிரவாகத்தை இரவல் வாங்கிக் கொண்டு ஓடுகிறது. கரையில் தரிந்து ஹைஸ்கூல், அக்ரஹாரம், பெருமாள் கோவில்... சற்றுத் தள்ளிப் பூமிநாதர் ஆலயம்... எங்கள் உலகம் இதுதான். நாங்கள் புரண்டு எழுந்த புழுதி, நாங்கள் படித்துப் பயின்ற பள்ளி, எங்கள் உள்ளத்தை, உடலை வளர்த்த சூழல் இவைதான்.

அது அந்தக் காலம் என்று ஒதுக்கித் தள்ளிவிட மாமாங்கங்கள் ஒன்றும் ஆகிவிடவில்லை. இருந்திருந்து ஐந்தாறு ஆண்டுகளே ஆகியிருக்கும் அவனைக் கண்டு. அதோ பேருந்து நிலையத்தில் கேட்பாரற்றுக் கிடக்கும் வில் வண்டிகளுக்குச் சற்றுத் தள்ளி... ஒரு வெற்றிலைச் சீவல் கடை. அதன் ஏகச் சக்ராதிபதிதான் என் நண்பன் கபீர்.



வெற்றிலைக் காம்பைக் கிள்ளவே கை கூசுமே அவனுக்கு! அவனா ஓர் உயிரைக் கிள்ளி எடுத்திருப்பான்! என்றால் நம்பவே முடியவில்லை.

குற்றாலத்தின் சாரல் தொடங்கிவிட்ட நேரம். வீதிப் புழுதி யெல்லாம் புரண்டடித்துக் கொண்டு வீடுகள் தாழ்ந்த நுழை வாசல்களில் புகுந்து பரவும் காலம். இலேசான சாரல் மண் மணம் பரப்ப...இயற்கை தன் இதமான குளுமையை வாரி வழங்கத் தொடங்கியிருந்தான். நான் என் பிறந்த மண்ணைப் பார்க்கப் போயிருந்த அந்தச் சமயம் கபீர் நெல்லை ஜங்ஷனுக்கு வந்திருந்தான.

''என்ன மாப்ளே! (என்னை அவன் இப்படித்தான் அழைப்பான்) இப்பத்தான் வாரீகளா?''

சுருள் சுருளான கேசம். சற்று அதிகமாகவே நீண்ட கிருதா. பால் வடியும் முகத்தில் பல் வரிசைக்கு மேலே அரும்பிக் கிடந்த மீசை... கபீர்தானா இவன்?

''வெவரம் புரியலையா... கபீருதான்... அதே வெத்தலைக்காரப் பய...''

''அடே, கபீரா? ஆளே அடையாளம் தெரியாம இப்படி 'சேஞ்ச்' ஆயிட்டியே!''

''அது என்னவாம் சேஞ்சு? மாதிப்புட்டியேன்னு அளகா தமிழ்லேதான் கேக்கறது!''

கலகலவென்ற என்னை ஆட்கொண்ட அதே சிரிப்பு. காலம் இன்னும் அதை மாற்றவே இல்லை.

வழி நெடுக அவன் பேசிக் கொண்டே வந்தான். தனக்கே உரித்தான பாணியில் கிராமத்துச் செய்திகளைக் கிண்டலாக விமர்சித்துக் கொண்டே வந்தான்.

தொலைவில் எங்கிருந்தோ நாதஸ்வரத்தின் இனிய ஓசை கேட்டது. 'போச்சு, போச்சு, கெடுத்தானே பாவி!' என்றான்.

''என்ன கபீர்?''

''என்னவா?.. கானடாவிலே சஹானா வாடை அடிக்குதே தெரியலே?''



''ஏய், உனக்கு என்னடா சங்கீதம் தெரியும்?''

''என்ன அப்படிச் சொல்லிப்புட்டீக? ஹரிகேச நல்லூர் காத்து நம்ம பக்கமாத் தானே அடிக்கு! முத்தையா பாகவதர் பரம் பரையில்லே!...''

ஒரே எக்காளச் சிரிப்புத்தான். அவனது இறுக்கு, கவியுள்ளம், மேதா விலாசம் குறும்பு எதுவுமே மாறவில்லை.

அப்போது நான் போயிருந்த சமயத்தில் கிராமத்தில் அம்பிகைக்குப் பூஜை. நவ ராத்திரி விழா. திருவிழாவின் நினைவும்கூடக் கபீரைப் பிணைத்துக் கொண்டு தானே என்னுள் எழுகிறது!

அவன் நமாஸ் படிப்பான். அதே சமயம் மரகதாம்பிகை கோயில் வாசலில் நின்று பாடவும் செய்வான். தர்க்காவில் திமிதிப் பான். கோவில் திருவிழாவில் சண்டித்தனம் செய்து காஸ் லைட்டும் தூக்குவான். ஜங்ஷன் சாலைக் குமரனு, குறுக்குத்துறை சுப்ரமண் யனு, நெல்லையப்பனு, ஸ்ரீவைகுண்டத்து உல கனந்தவனு, அத்தனை பேரையும் எடுப்புக் கொரு பாட்டு,—தொடுப்புக் கொரு பண்,— என்று தன் இசையால் வசப்படுத்தி ஊராரின் அன்பையும் அபிமானத்தையும் சம்பாதித்துக் கொண்டவன் கபீர்.

பெரிய வாய்க்காலில் புரண்டு கொண் டிருந்த நீரைத் திருப்பி நன்செய்களுக்குப் பாய்ச்சி விட்டிருந்தார்கள். வடிகால்களின் சலசலப்பை ரசித்த வண்ணம் வரப்புகளின் மேல் தன்னந் தனியாக நடை போட்டுக் கொண்டிருந்தேன்.

''என்ன மாப்ளே, நமக்குப் போட்டியா நீரும் இப்படி லாத்துறீரா?''

கபீர்தான் வந்து கொண்டிருந்தான். கொடிக்காலிலிருந்து வாங்கிக் கொண்டு வந்த வெற்றிலைப் பொதி கையில் காட்சி யளிக்க, உற்றுக் கவனித்தேன். அழகாகத் தான் இருந்தான்... வாட்ட சாட்டமாக.

''என்ன அப்படிப் பாக்றீக?''

நான் சிரித்துக் கொண்டே கேட்டேன்:

''ஊரிலே யார் யாருக்கோ கல்யாணம் வருதே. நம்ம கபீருக்குக் கல்யாணம் நடந்தா எப்படி இருக்கும்னு பாக்கறேன்... எப்போ கபீர்?''

அவன் ஓர் அவுட்டுச் சிரிப்பு சிரித்தான்.

''என்னையா கலியாணம் எப்போன்னு கேக் கறீக?... ப்ஸ்ஸ்!''

''உன்னைத்தான் கபீர். எதுக்கு அப்படிச் சிரிக்கிறே?''

''மாப்ளே, ஊரு ஒலகம் மொதல்லே இந் தப் பய யாருக்குச் சொந்தம்னு நிருமானிச் சாகட்டும்...''

''எதைச் சொல்றே?''

''பின்னே என்ன மாப்ளே! இந்தக் கபீரு காசிம் மரக்காயரோட வளப்பு மகன்தேன், இல்லேங்கலே. ஏதோவொரு ரயில் விபத்தின் போது அநாதைக் கொளந்தையாக் கெடந்த என்னை அவுக எடுத்து வளத்தாகன்னு... அதுக்காக என்னை முசுலீம்னே நிருமானிச் சுடறதா? இந்துவாயும் இருக்கலாமில்லே? இதைச் சொல்லப் போனு எங்கடவங்க என் னைக் காப்பிரிப் பயன்னு ஏசுறாங்க. அட ஓங்கடவங்களானு என்னை ஏத்துக்கிறாகளா? கேளுங்க மாப்ளே, இன்னிக்கு நம்ம மரக தம்மாவுக்கு (அம்பிகையை அவன் அழைக் கும் விதம்) ஒரு பச்சைப் புடவை எடுத்துக் குடுத்தேன். வாங்க மாட்டேன்னுட்டா களே!....''

''ஏன்?''

''என்னைக் கேட்டா?... இந்த வெத்திலைக் காரப் பய அளுக வெத்திலையை வித்த காசு தெய்வத்துக்கு ஒப்பாதுன்னு நெனைச் சாகளோ என்னவோ!''

நான் வாயடைத்து நின்றேன். அவன் பெருமூச்செறிந்தான்.

''எனக்கே நான் இந்துவா முஸ்லீமான்னு தெரியலேயே மாப்ளே! யாருக்குமே சொந்த மில்லாம ரெண்டுங் கெட்டானு இருக்கிற இந்தப் பய கடைசி வரை இப்படியே இருந் துட்டுப் போயிட்டா குடி முளுகியா பூடும்?''

''கபீர்!...''

''மாப்ளே! இந்த ஒலகம் என்னை இந் துன்னு ஏத்துக்கிட்டா என்னையும் கோயி லுக்குள்ளாறக் கூட்டிக்கிட்டுப் போவீக இல்லே... இப்ப மட்டும் என்ன?... பட்டை பட்டையா திருநீறு இளுத்துக்கிட்டேன்னு உங்களை விட நல்லா யிருப்பேன் இல்லே!''

அவன் மீண்டும் சிரித்தான். கடகட வென்று சிரித்தான். பேச்சில் தொனித்த சோகத்தைச் சிரிப்புத் திரை போட்டு மறைக்க முயல்கிறான் என்று நன்றாகத் தெரிந்தது.

''சேதி தெரியுமா மாப்ளே, நம்ம மாடி வீட்டுக்கார ஐயா வராகளாமில்லே...''

'மாடி வீட்டு ஐயா' என்று அவன் குறிப் பிட்டது மரகதத்தின் தந்தையை (ஆம், இப்போது பத்திரிகைச் செய்தியில் படித் தேனே அதே மரகதம்தான்) அவர்கள் கிரா மத்தை விட்டுக் குடும்பத்தோடு சென்னைக் குப் போய் ஏழெட்டு ஆண்டுகள் இருக்கும். சுப்பையரின் ஒரே மகள் மரகதம். வெகு நல்ல பெண். சுவர்ணச் சிலை போல் அசைந் தசைந்து அவள் கோவிலுக்குப் போவதே ஒரு தனி அழகு.

''மரகதமும் வருதாமா?''

''வரணும். ஏம் மாப்ளே, இப்ப அதுக்குப் பதினாறு பதினேழு வயசிருக்குமில்லே?''

''உம்!''

பூமிநாதர் கோயில் நவராத்திரி விழா தொடங்கி விட்டது. அதிர் வேட்டும் மேளச் சத்தமுமாக ஊரே திமிலோகப்பட்டது. அம்பிகைக்குத் தாழம்பூச் சடை வைத்துப் பின்னி ஏக அலங்காரம். இரவு மணி எட்டுக் கெல்லாம் உலக நாயகி, மரகத வல்லித் தாய், சர்வாலங்கார பூஷிதையாய் வீதி உலாப் புறப்பட்டு விட்டாள். வாண வேடிக்கையும் மத்தாப்பும், வாத்திய இசையும் வேத பாராயணமுமாக ஒரே கோலாகலம். வெளி வாசலில் காத்திருந்த கபீர், விளக்கு-ஏந்தி ஒருவனிடம் ஏதோ சொல்லித் தன் தலையில் காஸ் விளக்கை ஏந்திக் கொண்டான்.

தாயின் திருக்கோலத்தைக் காண விழை வோரின் கசமுச, சப்பரம் தூக்குவோரின் இலேசான முனகல், இவற்றுடன் ஊர் வலம் முன்னேறியது. வீட்டுக்கு வீடு

# பெப்ஸ்

## இருமல்
## மற்றும் தொண்டைப்
## புண்ணைப்

**போக்க ஒரு மூலிகைச் சத்துள்ள நம்பகமான நிவாரணி. பயனளிக்கும், இன்சுவையுள்ள பெப்ஸ்.**



லாஸெஞ்சைப் போல வாயில் அடக்குங்கள் பெப்ஸ். அதில் மூலிகைச் சத்துக்களும் நச்சுமுறிப்புப் பொருள்களும் அடங்கியுள்ளன. அவை தொண்டை மற்றும் சுவாச கோசத்தில் பாதிக்கப் பட்டுள்ள பாகங்களில் ஊடுருவிச் செல்லுகின்றன. பெப்ஸ் அற்புதமாக செயல் புரிந்து, இருமலுக்கும் தொண்டைப் புண்ணுக்கும் விரைவில் இதமளிக்கிறது.

பயனளிக்கும், இன்சுவையுள்ள பெப்ஸ் எப்போதும் கைவசம் இருக்கட்டும்.

**பெப்ஸ்** 50 ஆண்டுகளுக்கும் மேலாக நம்பகமான இருமல் நிவாரணி.



இந்தியன் ஏர்லைன்ஸ் போக்குவரத்து அதிகாரி திரு எச். எஸ். மணி அவர்களது சகோதரரும், ஓய்வுபெற்ற உதவி லேபர் கமிஷனருமான திரு **எச். ராமசுவாமி அய்யரின் ஷஷ்டியப்த பூர்த்தி வைபவம்** சமீபத்தில் நாகர்கோயிலில் வெகு விமரிசையாக நடைபெற்றது. வைதிக முறைப்படி நடைபெற்ற இந்த அறுபதாம் கல்யாணத்துக்கு நண்பர்களும் உறவினர்களும் விஜயம் செய்து சிறப்பித்தனர்.







திருவாரூர் ஸ்ரீ டி. வி. கிருஷ்ணமூர்த்தி அய்யர் குமாரன் சிரஞ்சீவி டி. கே. சிவராமனுக்கும், அத்தாழநல்லூர் ப்ரஹ்மஸ்ரீ ஏ. ஓய். கிருஷ்ணச்ரௌதிகள் குமாரி ஸத்யபாமாவுக்கும் சமீபத்தில் சென்னையில் திருமணம் வெகு சிறப்பாக நடைபெற்றது. வாழ்க மணமக்கள்

ஜகந்நாயகிக்கு வரவேற்பு அஞ்சலி. அதோ அந்தப் பெரிய வீட்டெதிரே ஊர் வலம் நிற்கிறது. வீட்டுப் பெரியவருடன் அவர் மகள் மரகதமும் கரங்களில் ஏந்திய நைவேத்தியத் தட்டுடன் வெளியே வருகிறாள். நான் அயர்ந்து போனேன். அப்பப்பா, பிரமிப்பூட்டுகிற அழகு. சின்னஞ் சிறிய பொற்சிலை, சிற்பி செதுக்கிய எழிற் சிலையாக வளர்ந்து விட்டிருந்தது. உடலில் அதே நளினம், அதே அசைவு. தெய்வீகக் களை பொருந்திய குழந்தை முகத்தில் விழிகள் வியப்பால் விரியத் தாயை வணங்குகிறாள்.









அதுதான் கபீரின் வாழ்க்கையில் ஒரு திருப்பத்தை ஏற்படுத்திய கணமாக இருந்திருக்க வேண்டும். நான் மரகதத்தைப் பார்த்தேன். அவள் உலக நாயகியைப் பார்த்துக் கொண்டிருந்தாள். கபீர் தேவியையும் அவளையும் மாறி மாறிப் பார்த்துக் கொண்டிருந்தான். காணற் கரிய காட்சியைக் கண்டாற்போன்று அவன் கடை விழிகளில் நீர் முத்துக்கள். அவன் உடல் சிலிர்த்ததோ என்னவோ, உள்ளம் சிலிர்த்திருக்க வேண்டும். அதன் அடித்தளத்தில் புதையுண்டு கிடந்த உணர்ச்சி பீறிட்டுக் கொண்டு இசை வெள்ளமாகப் பெருக்கெடுத்தது.

அடுத்து வந்த தினங்களில் ஏதேதோ வதந்திகள். வெற்றிலே வாடிக்கை வீடுகளில் ஒன்றில் அவன் வெகு நேரம் நிற்கிறான். வட்டமிடுகிறான். பேப்பர் போடுகிற சாக்கில் எந்தப் பெண்ணிடமோ சிரித்துப் பேசுகிறான் என்றெல்லாம் பேச்சுக்கள் பராபரியாகக் காதில் விழுகின்றன. யார்?... யார்?... அவளா? இருக்க முடியுமா?

மாலை நேரம். ஊர்க் கோடி காந்திமதி டாக்கீஸுக்குக் கூட்டம் போய்க் கொண்டிருந்தது. வாலிபப் பையன்களின் ஜமா வழக்கம் போல் கபீரின் கடை வாசலில். வெற்றிலே போட்டுத் துப்புவோரும், சற்று ஒதுங்கி நடக்கும் பெண்களைச் சங்கீதப் பாட்டுக்களால் கேலி செய்வோருமாக அவர்களுக்கு ஒரே குஷி. அந்த மரகதம் — இன்று செய்திகளில் 'கபீரின் முன்னாள் காதலி' என்று குறிக்கப் பெறுகிறாளே அவள் வந்து கொண்டிருந்தாள். இளவட்டங்களின் குறும்பு ஓங்கியது. இந்த ரங்கநாதன் — கொலையுண்ட அதே ரங்கநாதன்தான் — அன்றைய கூட்டத்துக்குத் தலைவன் — அளவுக்கு மீறியது கிண்டல். கடைக்குள்ளிருந்தே கபீர் அவனைக் கண்டித்தான். ரங்கநாதன் விடுவானா? திமிரோடு பேசினான்.

மரகதவல்லி -- மால் -- மருகனின் தாயே
மங்கள கௌரி --மனோகரி நீயே !...

கௌரி மனோகரி ராகத்தின் மிடுக்கான எடுப்பில், துடிப்பில், குழைவில், நயத்தில், உலகத் தாயை உருகி உருகிக் கூப்பிட்டான் அவன். அந்த மகோந்நத விநாடிகளில் கூட்டம் தன்னை மறந்து, சுற்றுச் சூழலை மறந்து பரவச மேலீட்டால், மயிர்க்கூச்செறிய, ''ஜகன்மாதா!'' என்று ஆரவாரித்தது. 'பிறவிக் கலைஞனடா நீ!' என்று அவனை வாரி அணைத்துக் கொள்ள வேண்டும் போலிருந்தது எனக்கு.

கௌரி மனோகரி வழிகாட்டக் குவலய நாயகி நடை பயின்றாள். சற்றே இறக்கி வைக்கப்பட்ட காஸ் விளக்கு மீண்டும் தலையில் ஏறியது. திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டே நடந்த கபீர் கால் தடுக்கி...

''யாரடா அவன்கிட்டே விளக்கைக் குடுத்தது. எலே கந்தையா, நீ வாங்கிக்க!'' என்று தருமகர்த்தாவின் உறுமலில் விளக்கு கை மாறியது.

''என்னடா கட்டின பெண்டாட்டி மாதிரி பரிஞ்சுக்கிட்டு வரே. பத்திரிகை வாங்குகிற போது உன்னைப் பார்த்துப் பல்லைக் காட்டினான்னு அவ என்ன பத்தினியா?....''

விருட்டென்று பாய்ந்த கபீரின் கரம் அவனது கன்னத்தில் பளீரெனப் பதிந்தது.

''பாவி, எதைப் பத்தியும் பேசறதா?.... உண்ட தெய்வம் மரகதம்மாவைப் பத்திப் பேசவியா இப்படி !.... இந்த வையத்தையெல்லாம் உட்டுப்புடும்.... இந்த விசயத்திலே கபீர் பொல்லாதவன்!''

அவன் ஆவேசங்கண்டு கூட்டம் கலைந்தது. அவன் என்னிடம் தனிமையில் முறையிட்டுக் கொண்டான்.

''பாரும் மாப்ளே... ஒலகத்திலே வெகுளிப் பயலுகளுக்கெல்லாம் எடமே இல்லே...''

என்றால் அன்று கபீரைப் பாதிதான் நம்ப முடிந்தது. நெருப்பின்றிப் புகையுமா?

நெருப்பின்றிப் புகையும் என்பது பிறகுதான் தெரிந்தது. எந்த மரகதத்தைக் கேலி செய்யக் கூடாது என்று ரங்கநாதனை அடித்தானோ, அதே மரகதத்துக்கும் அந்த

ரங்கநாதனுக்கும் அடுத்த மாதமே நடந்த கல்யாணத்தில் பந்தக்காலுக்கு வாழைக் கமுகு கட்டுவதிலிருந்து ரோட்டில் விழும் எச்சில் இலைகளுக்குப் பறக்கும் ஏழைக் கும்பல்களை ஒதுக்குவது வரை அவன் இருந்து உழைத்த உழைப்பு !.... ஆம்... வெளியி லேயேதான் நின்று கொண்டிருந்தான் அவன்.

பிறகு பெண்ணும் மாப்பிள்ளையும் வெளியே வரும் வரை காத்திருந்து....

''மாப்பிள்ளை ஸார், இனிமே நீர் என்ன வேணும் பேசும், அவுங்க வெச்சா வாங்கிக் கும்....'' என்று கூறிச் சிரித்த அந்தக் கபீரா, இன்று பேப்பரில் 'மரகதத்தின் முன்னாள் காதலன்' என்று வர்ணிக்கப்படுபவன் !.... உம்ஹூம்... என்னால் நம்பவே முடியவில்லை.

ஹூக்ளியில் புஸ்ஸென்ற பெருமூச்சுடன் சோம்பலாக நகர்ந்து கொண்டிருந்த மரக் கலங்கள் பேய்க் குரலில், 'பூம் பூம்' என்று அலறிய போதுதான் ஸ்ட்ராண்ட் ரோட் வந்து விட்டது என்பதை உணர்ந்தேன்.

ஆபீஸில் நுழைந்ததுமே மானேஜிங் டைரக் டர் மஜூம்தார் அழைத்தார். 'இரண்டு மாத காலமாகத் தொழிற்சாலையில் நடக்கும் வேலைநிறுத்தம் மோசமான கட்டத்தை அடைந்து விட்டது. தொழிற்சாலையை வேறு இடத்துக்கு மாற்றலாமா என்று யோசனை. சென்னையில் நல்ல இடம் ஏதேனும் கிடைக்கு மானால்...' என்று அவர் கூறியபோது அந்த அம்பிகையே என் பிரச்னைக்கு விடை காண் பது போலத் தோன்றியது. உடனே விமான டிக்கெட்டுக்கு ஏற்பாடு செய்தேன்.

நெல்லையில் அந்த விடுதியின் சொந்தக் காரரை எனக்கு ஏற்கனவே பரிச்சயம் உண்டு. எனது நோக்கத்தைக் கேட்டதும் அவர் ஆச் சரியப்பட்டார்.

''நீங்க என்ன உதவி செய்துட முடியும்னு நினைக்கிறீங்க?... நான் சொல்லாததா, நான் கேக்காததா! இந்தக் கபீருப் பயலை வளர்த்த வனே எனக்குத் தெரியும். பத்தமடையிலே பாய் பின்னி வித்துட்டிருந்தாரு. கௌரவத் துக்கு அஞ்சின குடும்பம்.... இவனும் ஒழுங் காத்தான் இருந்தான். வெத்தலை பாக்கு விக்கறதோட இருந்திருக்கலாம். இவன் போறாத காலம், இந்த செம்மம் (ஜென்மம்) வைக்கக்கூடாத எடத்துலே அம்பை(அன்பை) வச்சுப் போட்டுது...அந்தப் பொண்ணுக்குக் கலியாணம் கழிஞ்ச பிறகாவது அவுங்களை இந்தப் பய மறந்திருக்கணும்...''

எனக்கு இருப்புக் கொள்ள வில்லை. என்ன தான் நடந்தது?.... கபீர் அவளைக் காதலித் தானா ?....

'' கபீர் உங்ககிட்டே வேலைக்கு வந்த விவரம் ?.....''

அவர் கூறினார்.

''அந்தக் கலியாணம் கழிஞ்ச அவுங்க ரெண்டு பேரும் ஊரை விட்டுப் போயிட் டாங்க. இந்தப் பயலுக்கு ஊரு பிடிக்கல்லே. டேண்டு கிளப்பிட்டான். ஆறு வருசம் போல அங்குன இங்குன சுத்திபிருக்கான். அன்னிக் குப் பாக்கேன், வெளக்கு வச்ச நேரம்..... இங்கே வந்து நிக்கான்.... என்னலே, எங்க வந்தேன்னேன்... 'வேலைக்குத்தேன் முரு

வாளி..... எதாச்சும் செய்யணும்கான்..... இருந்து தொலை சவம்னு கையைக் காட்டி னேன். அப்ப பிடிச்சக்கிட்டவன்தான், நாலு வருசமும் ஒழுங்காத்தான் இருந்தான்..... இவன் பொல்லாக் காலமோ, அவுங்க போறாத வேளையோ அன்னிக்குப் பாத்து அவுங்க.... இங்க வந்திருக்காங்க.....''

''பதினாறு மைல்லே ஊரை வச்சுக்கிட்டு.''

''மதராஸ்லேயிருந்து காரிலே வந்திருக் காக இல்லே!.... காரு சூடாயிடுச்சோ.... இல்லே இவுகளுக்குக் களைப்பா இருந்திச்சோ.. வந்து தங்கினாக. நாம் பாவி, கபீரு ஊருக்கார வகளாச்சேன்னு சொல்லி, அவன் பிளாக்கு லேயே ரூமைக் கொடுத்து வச்சேன்.''

''பிறகு ?''

''பொறவு என்னுங்க.... ராத்திரி வேளை. ஒர் ஒம்பதரை மணியிருக்கும். ரெண்டு வித மாப் பேசிக்கிறாங்க.... இந்தப் பயதான் போய் ரூம்புக் கதவைத் தட்டுறானே...இல்லே ...அவுகதான் கூப்பிட்டாங்களோ தெரியலே. புருசன் பெஞ்சாதின்னு ஆயிரம் இருக்கும். புருசன்காரன் அந்த அம்மாவை எதுக்கோ அடிச்சிருக்கான்..... இவன் நாட்டாமைத் தனமா குறுக்கால பூந்திருக்கான். கோவத் துலே என்ன செய்யறோம்னு தெரியாமெ, புருசன்காரனைப் புடிச்சுத் தள்ளியிருக்கான்... பால்கனியிலே போய் இருந்தவரு... எழுந் திரிச்சிருக்காரு. அங்கே போய் அவரை எட்டி உதைச்சி புடிச்சி வெளியே போட்டுட்டான்.''

''அட, பாவி !''

'' அவனைப் பாவின்னு இட்டி என்ன செய்யறது?.... எம்புட்டுத் தரமோ கேட்டுப் புட்டேன்.... உண்மையைச் சொல்லுடா, அப்படின்னு.... கழுத்தை அறுத்தாலும் சொல்ல மாட்டேனுட்டான்.... 'மேலே பாஞ்சாரு, ஒதுங்கிக்கிட்டேன், வெளியே உருண்டிட்டாரு' அப்படி ஏதாச்சும் சொல்லு டான்னேன். ஊம்... அவன் மசியலியே.... வெளியே விழுந்த பாவி வேறே சொல்லிப்புட் டான், 'இவன்தான் தள்ளிப்புட்டான்'னு. கேசு பலமாயிடுச்சு.''

எனக்கு ஒன்றும் புரியவில்லை. எங்கோ நிரடுகிறது. ஏதோ தட்டுகிறது... லாட்ஜில் வந்து தங்கினது சரி. இவன் அவர்களைப் பார்த்தவரைக்கும் புரிகிறது... அப்புறம் ?... அதுதான்... அதுதான்... அங்கேதான் ஏதோ நடந்திருக்க வேண்டும் !....

என் அடுத்த இலக்கு சிறைச்சாலை.

விடிந்தது பொழுது!... அவனுக்கும் விடிய வேண்டுமே! கபீரைப் பார்க்க விசேஷ அநுமதி பெற்றேன்.

''வாங்க மாப்ளே.... எப்ப வந்தீக....?'' அதே நிறைவுடன் வரவேற்றான். முகம் வாடி யிருந்தது. கண்கள் கலங்கியிருந்தன.

''என்ன கபீர்.... இப்படி....'' எனக்குப் பேச்சு வரவில்லை.

''என்ன... இப்படி.... சிறு குழந்தையாட் டம் அழுகுறீக.... என்ன ஆயிடுச்சி இப்பம்?''

எத்தனை அப்பாவியடா நீ......! அவனைக் கட்டிக் கொண்டு கதற வேண்டும் போல் இருந்தது எனக்கு.

''கபீர், உண்மை என்ன?... என்னிடம் ஒளிக்காமல் சொல்லு!.... உனக்கு அழிந்துக்

# அடிக்கடி சிறுநீர் கழிப்பது

அடிக்கடி சிறுநீர் கழிப்பது ஒரு கொடிய வியாதி, அது, பாதிக்கப்பட்டவரை நாளுக்கு நாள் மரணப் பாதையை நோக்கி இட்டுச் செல்லும்.

இவ்வியாதியால் அல்லல்படுவோருக்கு அதிக தாகம், பசி, உடல் பூராவும் வலி ஏற்படும்; உடலால் உழைக்கவோ, அல்லது மூளையை உபயோகப்படுத்தி வேலை செய்யவோ உற்சாகமிராது. நாளுக்கு நாள் உடல் எடை குறையும். உடலில் ஒருவித நமைச்சல் ஏற்படும். சரும வியாதியால் அவதியுறுவர். கல்லீரல் மந்தமாகி, மூத்திரக் காய்கள் பலவீனமடைந்து, சரிவர இயங்காது. இந்த வியாதியை உடனடியாகக் கவனிக்காவிடில், கீல் வாயு, பார்வைக் குறைவு, தூக்கமின்மை, அதிகக் களைப்பு, உடலில் கட்டிகள் ஏற்படுவது போன்றவைகளால் கஷ்டப்பட நேரிடும்.

**பழையகாலத்திலிருந்து அனுசரிக்கப்பட்ட யூனானி முறைப்படி அபூர்வ மூலிகைகளினால் தயாரிக்கப்பட்ட "யூரிடோன்" மாத்திரைகள் இந்தக் கொடிய வியாதியை குணப்படுத்தும்.**

**"யூரிடோன்" மாத்திரைகளை உபயோகப்படுத்தி, ஆயிரக்கணக்கானவர்கள் பயன் அடைந்துள்ளனர். அடிக்கடி சிறுநீர் போவது கட்டுப்படுத்தப்பட்டு, ஒரு சில நாட்களிலேயே வியாதியின் அல்லல்களிலிருந்து நிவாரணம் அடைந்து மன நிம்மதியைப் பெறுகின்றனர்.**

**"யூரிடோன்" சிக்கனமானது, பத்திரமானது, எளிதில் எடுத்துச் செல்லக் கூடியது. உணவு உட்கொள்ளுவதில் விசேஷக் கட்டுப்பாடுகள் ஏதும் இல்லை. சாதாரண உடல்நலமுள்ளவர்களும் நல்ல ஆரோக்கியமாக இருக்க இதை உட்கொள்ளலாம். விவரங்கள் அடங்கிய இலவசப் பிரசுரத்துக்கு எழுதவும்.**

40 மாத்திரைகள் கொண்ட பாட்டில் விலை ரூ. 10. பாக்கிங் தபால் செலவு ரூ. 2 தனி.

ஒரே தடவையில் இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட பாட்டில்களுக்கு ஆர்டர் அனுப்புபவர்களுக்கு பாக்கிங் மற்றும் தபால் செலவு இலவசம்.

**Barrys Remedies Laboratories (K. L.)**

**G. P. O. Box 874 - CALCUTTA-1**

# ஆண்களின் தேவைகளை நிறைவேற்றுகிறது ஒகாஸா



வாழ்விலே வெற்றி காண்பதற்கு வேண்டிய வலிமையை ஆண்களுக்கு அளிக்கிறது ஒகாஸா. வயதுக்கு மிஞ்சிய முதுமையைத் தடுத்து, ஆரோக்கியத்தைக் கூட்டி இளமைத் துடிப்பையும் வலிமையையும் மீட்டுத் தருகிறது ஒகாஸா. உலகெங்கிலும் இலட்சக் கணக்கான வயது வந்தவர்கள் இன்று ஒகாஸா சாப்பிடுகிறார்கள். இழந்த வலிமையை மீட்டுத் தரும் நவீன-டானிக் மாத்திரைகள் அவை.

ஒகாஸா-ஹார்மோ-பார்மா லிமிடெடின் லண்டன்-பெர்லின் தயாரிப்பு.

எல்லா பிரபல மருந்துக் கடைகளிலும் கிடைக்கிறது. அல்லது நேராகவும் பெறலாம்.

**OKASA CO. PVT. LTD.**

**P. O. BOX 396, BOMBAY-1.**

CU 220

# தேர்தல் மோகம் இல்லாமலே ஒரு டிமோகிராட் வாதியாக இருப்பது எப்படி?



சுலபமே—லட்சுமி மில்ஸ் டிமோகிராட் ஷர்ட்டிங்கினுல் தயாரித்த ஷர்ட்டை அணியுங்கள். மெர்சரைஸ்டு பாப்ளினுல் தயாரான அது வெளிர் நிறங்களிலும், கெட்டி வண்ணங்களிலும் எந்த லட்சுமி மில்ஸ் சில்லரை ஸ்டோர்களில் கிடைக்கிறது.

அது சலவை செய்ய எளிது. சலவைக்குப் பிறகு எழிலுடன் இருக்கிறது

ஒரு எச்சரிக்கை—உங்கள் கவர்ச்சியான தோற்றத்தைக் கவனிப்போரை கணக் கெடுக்காதீர்கள். அவர்களை எண்ண முடியாது.

**டிமோகிராட்***



THE
LAKSHMI MILLS
COMPANY LIMITED
COIMBATORE

SYMBOL OF
OUTSTANDING FABRICS

லட்சுமி மில்ஸ்
பாரம்பரியமும் சேவையும்
இணைந்துள்ளவை.

கொள்ள உனக்கே உரிமை கிடையாது....!'' என்றேன்.

''மாப்ளே... அவிஞ்சா இந்த உடல்தானே அவியும்...உள்ளே இருக்கிறதை ஒருத்தராலேயும் அவிக்க முடியாதில்லே !''

''அட, பாவி !... உயிர் ஊசலாடுகிற நேரத்திலா இந்தக் கல்லுளி மங்கத்தனம் !... வேதாந்தம் வேண்டாம் கபீர், நீ மரகதத்தைக் காதலிச்சது உண்மையா ?... அதனால் ஏற்பட்ட விரோதத்திலே.....''

குறுக்குக் கம்பி வழியே என் வாயைப் பொத்தினான் அவன்.

'' வேணும்.... உங்க வாயால் அந்த வார்த்தையைச் சொல்லாதீங்க.... மரகதத்தை.... என் தாயையா!''

''அப்படியானால்....''

''மாப்ளே... உங்களுக்கு நெனைவிருக்குதா? அன்னிக்கு ஊர்வலத்துலே விளக்கு ஏந்திக்கிட்டு வந்தப்ப.. ஒரு பாட்டுப் பாடினேனே.''

''ம்....''

'' சின்ன வயசுலே யிருந்து உங்களோட பழகி, உங்க பண்பாட்டிலே ஊறி, உங்கள்ளே ஒருத்தனுலே வளந்துட்ட இந்தக் கபீர் வளர்ப்பால முஸ்லிம்தான், பிறப்பால எப்படியோ, நடப்பால இந்து.... மரகதம்மாவை.... என் தாயைப் பார்க்கும் போதெல்லாம், உள்ளுக்குள்ளாற குமைஞ்சுக் குமைஞ்சு எனக்கு அழுகை வெடிச்சுக்கிட்டு வரும். அவுங்களை என்ன கேட்பேன் தெரியுமா?.... ஏம்மா, எனக்கு இந்த ரெண்டுங்கெட்டான் வாழ்க்கை? நான் என்ன பாவம் செஞ்சேன்? ஒன்னைச் சப்பரத்துலே வச்சு என் தோளிலே சொமக்கக் குடுத்து வைக்கலியே அம்மா ! ஒன் சந்நிதிக்குள்ளாற வந்து எதிரே நின்னுக்கிட்டு... கூடை நிறையப் பூவைக் கொண்டு வந்து... அம்புட்டுப் பூவையும் அப்படியே உன் காலடியிலே கொட்டுற பாக்கியத்தை எப்பம்மா தரப் போறே !.... அடுத்த செம்மத்துலே தாறு......?''

''கபீர்......''

''சொன்னு பைத்தியக்காரத்தனமா தெரியும் மாப்ளே, அன்னிக்கு ஊர்வலம் கௌம்பிடிச்சு.... வெளக்குத் தூக்கறவங்கிட்டே பேசிச் சரிப்படுத்தி விளக்கை எடுத்தேன்.... அம்மா மொகத்தைப் பார்த்தேன். அந்த மொகத்திலே பளிச்சுன்னு சிரிப்பு... .'என்னடா கபீர், அப்படி இப்படின்னு எனக்கே வெளிச்சம் போடறியா'ன்னு கேக்கறமாதிரி.

'''என்னம்மா, பண்ணுவேன்... பக்கத்துலே வர முடியாட்டியும் தூரத்திலே இருந்தாச்சும் வெளிச்சம் போட்டுப் பார்க்கறேன்' அப்படின்னு உள்ளுக்குள்ளாற சொல்லிக்கிட்டேன் மாப்ளே.....''

''சொல்லு கபீர்.....''

''ஊர்வலம் வந்துகிட்டிருந்தது... பெரியவர் வீட்டு வாசல்லே இருட்டு... இருட்டிலே யிருந்து அவங்க மக மரகதம் வெளியே வந்திச்சு.... அவுங்க மொகத்திலேயும் வெளக்கு வெளிச்சம் படுது.... அம்மன் மொகத்திலே பார்த்த அதே சிரிப்பு.... 'அம்....மா!'ன்னு

கி. வா. ஜ.

சொன்னவை :



## மாட்டுப் பெண்

★ 'மனாட்டுப் பெண்'தான் 'மாட்டுப் பெண்' என்று மருவி வழங்குகிறது. மனாட்டுப் பெண் என்றால் திருமணம் செய்து கொண்ட பெண்ணைக் குறிக்கும்; அதாவது மருமகளைக் குறிக்கும். திவ்வியப் பிரபந்தத்தில் மருமகளைக் கண்டு உவந்து கூறப்படும் ஓர் அடியால் இதனை உணரலாம்.

## இரசத வட்டம்

★ டாக்டர் உ. வே. சாமிநாதய்யர் அவர்கள் எங்களுடன் பேசும் பொழுது சில சமயங்களில் 'பரிபாஷை'யில் பேசுவார். 'உன்னிடம் நூறு இரசத வட்டம் இருக்கிறதா?' என்று கேட்பார். இரசதம் என்றால் வெள்ளி. வட்டம் என்றால் ரூபாய். 'நூறு ரூபாய் கொடு' என்பதற்கு இப்படிக் கேட்பார். இதேபோல் ஆயிரம் ரூபாய்க்கு 'மாயிறு ஞாலவட்டம்' என்பார். தேவாரத்தில் மாயிறு என்பது ஆயிரம் என்று பொருள்படப் பயன்படுத்தப் பட்டிருக்கிறது. அதை உணர்த்துவதுபோல் இப்படிக் கேட்பார்.

## மோசம் போனுள்!

★ இலங்கைக்கு நான் சென்றிருந்தபோது அங்குள்ள ஒரு நண்பரிடம் பேசிக் கொண்டிருந்தேன். அவர் மிகவும் வருத்தப்பட்டு, ''எனக்கு ஒரு தங்கை இருந்தாள்; அவள் போன ஆண்டு மோசம் போனுள்...'' என்றார். எனக்குப் புரியவில்லை. 'மோசம் போனுள்' என்றால் தவறான பாதையில் சென்று விட்டாள் போலும் என்று நான் நினைத்தேன். பிறகு அவரே சொன்னார், 'அவள் இறந்து போனுள்' என்று. மோசம் போனுள் என்றால் இறந்து போனுள் என்று அர்த்தமாம்!

- மல்லிகோவன்

கத்தணும் போல எனக்குத் தோணுது..... என்னையும் அறியாமெ கத்திப் பாடினேன். எனக்கு அப்பத் தோணினதெல்லாம், 'தலையை வளைச்சுக் கஷ்டப்பட்டு என்னே ஏன்டா கபீர் பார்க்கணும்? உன்னைப் பார்க்க நான் எதிரிலேயே சின்னப் பெண்ணு நிக்க றேன்'னு சொன்னாப்பலே.... உண்மையிலே அம்மன் இன்னும் சப்பரத்துலேதான் இருக்கு தான்னு திரும்பித் திரும்பிப் பார்த்துக்கிட்டே நடந்தேன்..... கல் தடுக்கி.....''

என் கண்களைத் துடைத்துக் கொண் டிருந்தேன்.

''அனுவாதிக மாப்ளே... அதுலேயிருந்து. அந்தப் பொண்ணைப் பார்க்கும் போதெல்லாம் என் அம்மா நெனைவுதான் வரும்... கோயில் உள்ளாறப் போய்த்தான் பார்க்க முடியலே... நேரிலே.... எதிரே... பார்த்தேன்... பேசி னேன்.... சிரிச்சேன்... அவுங்களை யாராவது ஏதாவது சொன்னு தாங்க முடியாமத்தான் சீறினேன். என் அம்மா கலியாணத்துக்கு, பூவாகவும், பணமாகவும் கொண்டு கொடுத் தேன். என் கடமையில்லையா? அடுத்த செம்மம் என்னடா கபீர், இந்த சென்மத்தி லேயே எனக்கு விளா எடுத்துப் பார்த்துப் புடுன்னு அவுங்க எனக்குச் சந்தர்ப்பம் குடுத் ததா நெனைச்சுக்கிட்டு செஞ்சேன்.

''சொல்லுங்க, மாப்ளே....அந்த என் தெய்வத்தை.... ஒருத்தன் வாளாவெட்டியா அடிச்சு.... கண் கலங்க வெச்சா என்னாலே எப்படிப் பொறுத்துக்கிட முடியும்?''

எனக்கு இலேசாகத் திரை விலகியது.....

''அப்புறம்?''

''அப்புறம் என்ன?.... அன்னிக்கு லாட் ஜிலே ரூமுக்குச் சாப்பாடு கொண்டு வான்னாரு அவரு..... கொண்டு போனேன்.... அந்த அம்மாவைப் பார்த்து, 'பார்த்தியா... உன் காதலன் எச்சத் தட்டு தூக்கறான்'னு....''

சற்று நிறுத்திக் கண்களைத் துடைத்துக் கொண்டான் அவன். ஏதோ நிர்மானத்துக்கு வந்தவன் போல் மீண்டும் தொடர்ந்தான்.

''என்னமோ கேவலமாப் பேசினாரு..... நான் வெளியே வந்திட்டேன். ராத்திரி பத்து மணியிருக்கும். அந்த அம்மா வெளியே வந் தாங்க....'' 'கொஞ்சம் உள்ளாற வா'ன் னாங்க... போனேன்.... அவரு தரையிலே உளுந்து கெடந்தாரு.... 'ஒரு கை பிடி, மேலே படுக்கையிலே கெடத்திடலாம்'னாங்க. ஒரே நெடி... சாராய வாடை... காலைப் பிடிச்சேன், தூக்கிவிடலாம்னு... கண்ணை முழிச்சுக்கிட்டாரு.... கன்னாபின்னான்னு.... ஏசினாரு... அந்த அம்மா அழுதுகிட்டே 'இப் படித்தான் கல்யாணம் ஆனதிலேயிருந்து சொல்லிக்கிட்டிருக்காரு.... நான் உன்னைக் காதலிக்கிறேனாம்.... என்னிக்காவது நான் உன்னை அந்த மாதிரி பாத்ததாவது உண் டா'ன்னு கேட்டாங்க....எனக்குச் சப்பரத் துலே குந்திகிட்டு அந்த அம்மா, என் தெய் வமே அனுப்பிலே இருந்திச்சு... தாங்கலே... ' ஒங்களுக்கெல்லாம் ஏன்டா பெண்ண டாட்டி'ன்னு கேட்டேன். அவரு கோவத் துலே எளுந்து என்னை அடிச்சாரு. அந்த அம்மா தடுக்க வந்து அடியை எடுத்துக்கிட் டாங்க.... அடிச்சதோட நிக்காம, அவுங்க களுத்தை அழுத்திக்கிட்டு 'தொலைஞ்சு போ'ன்னு கத்தினாரு. அவுங்க மயக்கமா சரிஞ்சதும்தான், எனக்கு என்ன வந்திச் சின்னு புரியலே.... நான் அடிச்ச ஓர் அடி யிலே பால்கனியிலே போய் விழுந்தவரு, குடி வெறியிலே 'அடே... உன்னைத் தொலைச்சுப் பிட்டு மறு வேலே..... நான் போலீசுக்குப் போறேன்டா'ன்னு கத்திக்கிட்டு 'பால்கனி' கட்டைச் சுவருலே ஏறி வீதிப் பக்கமா.....''

கபீருக்கு மூச்சு வாங்கியது. தன் சட்டைப் பையால் முகத்தைத் துடைத்துக் கொண் டான்.

எனக்குத் தேவையான பாய்ண்ட் கிடைத்து விட்டது. என் சந்தேகத் திரை விலகி விட்டது. என் கபீர் கொலைகாரனல்ல. என் முயற்சியின் அடுத்த கட்டம் எனக்குத் தெளி வாகிவிட்டது.

'' கவலைப்படாதே, கபீர்.... எப்படியும் ரிவிஷன் அப்பீலில் ஜெயித்து விடலாம் ! நீ மட்டும் கொஞ்சம் பிடிவாதம் பண்ணாதே!''

அவன் முகத்தில் ஓர் இலேசான விரக்திப் புன்னகை.......

''வேண்டாங்க, மாப்ளே... அப்பீல்.... என்ன.... விடுதலை என்ன.... உசிரோட இருந்து அந்த அம்மாவோட வாள்க்கையைக் குட்டிச்சுவராக்கிட்டேன்.... என் தெய்வத் துக்கே செஞ்ச குத்தம் போல... இந்த வேத னையைச் சகிச்சுக்கிட்டு என்னாலே பூமியிலே இருக்கவே முடியாது மாப்ளே....! இப்பமே தூக்குலே உளுந்துட்டாப் போதும். ஆனா... எனக்கு விருப்பமான அப்பீலும் ஒண்ணு இருக்குது!... சொன்னாச் செய்வீங்களா?..''

ஆவலும் பரபரப்புமாகக் கேட்டேன் நான்.

''சொல்லு, கபீர் !''

''அடுத்த செம்மம்னு ஒண்ணு இருந்தா... அதுலேயாவது.... இந்தப் பாவி இப்படிப் பட்ட ரெண்டுங்கெட்டான் நெலை இல்லாம உங்கள்லே ஒத்தனாப் பொறக்கணும். என் மரகதம்மாவைச் சப்பரத்துலே வைச்சு... இந்தத் தோளிலே சொமக்கணும்.... அவுங்க சந்நதிக்குள்ளாற நின்னுக்கிட்டு.... கூடை கூடையாப் பூவை அள்ளி அவுங்க காலடியிலே கொட்டிக் கொடுத்து வைக்கணும்னு...... அவுங்ககிட்டே எனக்காக 'அப்பீல்' பண்ணு வீங்களா மாப்ளே!... சொல்லுங்க...அவுங்க நீதிமன்றத்திலே எனக்கு ஞாயம் கிடைச்சாப் போதும்.....''

சிறு வயது முதற்கொண்டே அவனோடு உதிரத்தோடு கலந்துவிட்ட ஆதங்கம், புற அறிவையெல்லாம் கடந்த உணர்ச்சிக் கொந்தளிப்பாக அவனது பேச்சில் சிதறிக் கொண்டிருந்தது.

அதோ காவலர்கள் அவனை உள்ளே அழைத்துப் போகிறார்கள். நான் சிலையாக நிற்கிறேன்.

**மரகதவல்லி -- மால் -- மருகனின் தாயே**
**மங்கள கௌரி -- மனோகரி நீயே!...**

**இசை எங்கிருந்தோ கேட்பது போல் இருக்கிறது.**



# தமிழில் அர்ச்சனை!

கல்லூரி மாணவர்கள் தங்கள் இஷ்டப்பட்ட போதனா மொழியைத் தேர்ந்தெடுக்கலாம் என்று உத்தரவு வந்திருப்பது போலக் கோவில் அர்ச்சனை விஷயமாகவும் இதே மாதிரி உத்தரவு வரப் போகிறது. ஆகஸ்ட் 15ந் தேதியிலிருந்து பக்தர்கள் தங்கள் இஷ்டப்பட்ட 'அர்ச்சனா மொழி'யைத் தேர்ந்தெடுக்கலாம். தங்கள் இஷ்டப்படி பகவானுக்கு சம்ஸ்கிருதத்திலோ அல்லது தமிழிலோ அர்ச்சகரை அர்ச்சனை பண்ணச் சொல்லலாம்.

அது என்னமோ தெரியவில்லை, தமிழில் அர்ச்சனை என்றதும் எனக்குப் பகவானுக்குப் பண்ணப்படும் அர்ச்சனை என்றே ஞாபகம் வரவில்லை. அதற்குப் பதில், தினம் என் மனைவி சரசு எனக்குப் பண்ணும் அர்ச்சனை இருக்கிறதே, அதுதான் ஞாபகம் வருகிறது. அந்த அர்ச்சனை என்ன என்று கேட்டு என் மானத்தை வாங்காதீர்கள். அது என்னவென்று தெரிந்துதான் ஆகவேண்டுமென்றால், அடுத்த வீட்டு அண்ணாசாமி அய்யரைக் கேளுங்கள், அல்லது அதே அர்ச்சனையை அவருக்குப் பண்ணிக் கொண்டிருக்கும் அவருடைய சகதர்மிணியைக் கேளுங்கள்.

இதில் வேடிக்கை என்ன தெரியுமா? என் மனைவி சரசு எனக்குப் பண்ணும் அர்ச்சனையைப் பார்த்துவிட்டுத்தான் தம் மனைவி தமக்கு அர்ச்சனை பண்ண ஆரம்பித்துவிட்டாள் என்று அடுத்த வீட்டு அண்ணாசாமி அய்யர் என்மீது குற்றம் சுமத்துகிறார். நானோ அவர் மனைவியைப் பார்த்து விட்டுத்தான் என் மனைவி எனக்கு அர்ச்சனை பண்ணுகிறாள் என்று சொல்கிறேன். இது எப்படியாவது போகட்டும், வீட்டு அர்ச்சனையை விட்டு விட்டுக் கோவில் அர்ச்சனைக்கு வருவோம்.

கல்லூரிகளில் எப்படிப் போதனா மொழி சுதந்திரம் இருந்தும், நடைமுறையில் தமிழுக்குத்தான் முக்கியத்துவம் அளிக்கப்படுகிறதோ, எப்படிச் சில கல்லூரிகளில் வேறு வழியின்றி மாணவர்கள் தமிழைத்தான் போதனாமொழியாக எடுத்துக் கொள்ள வேண்டியிருக்கிறதோ, அதைப் போல் கோவில் அர்ச்சனை விஷயத்திலும் தமிழுக்குத்தான் முக்கியத்துவம் அளிக்கப்பட வேண்டும் என்று நம் அரசினர் விரும்புவார்கள். ஆகவே தமிழில் அர்ச்சனையை எப்படிப் பிரபலப்படுத்தலாம் என்பதற்குச் சில யோசனைகள் கூற விரும்புகிறேன்.

இப்பொழுதெல்லாம் கோவில்களில் காசு கொடுத்துத்தான் அர்ச்சனைச் சீட்டு வாங்க வேண்டியிருக்கிறது. அர்ச்சனைச் சீட்டு என்றதும் எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது. ஏன் சரசுவையும் சீட்டு வாங்கிக் கொண்டுதான் எனக்கு அர்ச்சனை ஆரம்பிக்க வேண்டும் என்று சொல்லக் கூடாது...? 'என்னடா வம்பாகப் போய்விட்டது! கோவில் அர்ச்சனையைப் பற்றி எழுதிக் கொண்டிருக்கையில் வீட்டு அர்ச்சனையின் ஞாபகமே வந்துகொண்டிருக்கிறதே!

முக்கால்வாசிக் கோவில்களில் அர்ச்சனைக்குக் கால் ரூபாய் வாங்குகிறார்கள் என்று நினைக்கிறேன். சம்ஸ்கிருதம் படித்தவர்கள் குறைவு என்ற சாக்கைச் சொல்லி, சம்ஸ்கிருத அர்ச்சனைச் சீட்டை ஒரு ரூபாயாகப் பண்ணலாம். அப்பொழுது சம்ஸ்கிருத அர்ச்சனை குறைந்துதான் போகும், இல்லையா? தமிழில் அர்ச்சனை பண்ணுகிறவர்களுக்கு, கோவில் அதிகாரிகளே, தலைக்கு நாலணாக் கொடுப்பார்கள் என்று அறிவிக்கலாம். தமிழைப் போதனா மொழியாகக் கொள்ளும் மாணவர்களுக்கு விசேஷச் சலுகையாகப் பணம் தரும்போது இதை ஏன் செய்யக் கூடாது? இந்த ஏற்பாடு செய்து விட்டால் தமிழ் அர்ச்சனை செய்யும் பக்தர்களின் எண்ணிக்கை அதிகரித்து விடும் என்பதில் சந்தேகமில்லை. 'நாலணாக் கிடைத்தால் ஒரு கப் காப்பியாச்சே' என்று பக்தி இல்லாதவர்கள் கூடக் கோவிலுக்குப் போக ஆரம்பித்துவிடுவார்கள்.

ஆனால் இதில் ஒரு சிக்கல் இருக்கிறது. ஒருசிலர் இதையே பிழைப்பாக வைத்துக் கொண்டு, நாளைக்கு நாற்பது அர்ச்சனைகள்






செய்யச் சொல்லலாம். கடவுளை வழிபடுகிறவர்கள் இத்தனை அர்ச்சனைகள்தான் பண்ணலாம் என்று உச்ச வரம்பு நிர்ணயிக்க முடியாததலால் இந்த வழி அத்தனை சிறந்ததாக எனக்கு இப்பொழுது தோன்றவில்லை. ஆகவே இன்னொரு யோசனை கூறுகிறேன்.

இந்தக் காலத்தில் விளம்பரங்களால் சாதிக்க முடியாத காரியங்களே கிடையாது (மந்திரிமார்களின் பிறந்தநாள் கொண்டாட்டங்கள் உள்பட) என்பது உங்களுக்குத் தெரியும். ஆகவே இது விஷயத்தை எப்படி நல்லபடியாக விளம்பரம் செய்யலாம் என்று யோசனை கூறுகிறேன்.

பழைய காலத்தில் இரண்டு இங்கிலீஷ் வியாபாரிகளின் படம் பக்கத்தில் பக்கத்தில் அச்சிடப்பட்டு எல்லாக் கடைகளிலும், கண்ணாடிச் சட்டம் போட்டு மாட்டப்பட்டிருப்பதை நீங்கள் எத்தனை பேர் பார்த்திருப்பீர்களோ, தெரியாது. பழைய காலத்தில் இது எல்லாக் கடைகளிலும் தொங்கும். ஒரு வியாபாரி தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டிருப்பான். இன்னொரு வியாபாரி குஷியாகச் சிரித்துக் கொண்டிருப்பான். தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டிருப்பவனுக்கு அடியில், ''நான் கடனுக்கு விற்றேன்'' என்று எழுதியிருக்கும். குஷியாகச் சிரித்துக் கொண்டிருப்பவன் படத்தில், ''நான் ரொக்கத்துக்கு விற்றேன்'' என்று எழுதியிருக்கும்.*

இதைப் போலவே இரண்டு மாணவர்களின் படங்களைப் போட வேண்டும். முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டிருக்கும் மாணவர் படத்துக்கு மேலே, ''நான் பிள்ளையாருக்குச் சம்ஸ்கிருதத்தில் அர்ச்சனை செய்தேன், அதனால் பரீட்சையில் தோற்றேன்'' என்று எழுத வேண்டும். குஷியாகச் சிரித்துக் கொண்டிருக்கும் மாணவன் படத்துக்கு மேலே, ''நான் பிள்ளையாருக்குத் தமிழில் அர்ச்சனை செய்தேன். அதனால் பரீட்சையில் தேறினேன்'' என்று எழுத வேண்டும்.

இந்த விளம்பரத்தைப் பார்த்துவிட்டுத் தமிழைப் போதனா மொழியாக எடுக்க முன்வராத மாணவர்கள்கூடத் தமிழ் அர்ச்சனை செய்ய முன்வருவார்கள்.

என்னைக் கேட்டால், இவையெல்லாவற்றையும் விடத் தமிழ் அர்ச்சனையைப் பிரபலப்படுத்துவதற்கு மிகச் சிறந்த வழி, அமைச்சர்களும் சரி, அவர்களைச் சேர்ந்தவர்களும் சரி, கடவுள் நம்பிக்கை இருக்கிறதோ, இல்லையோ, தினம் கோவிலுக்குப் போய்த் தமிழில் அர்ச்சனை செய்வது என்று வழக்கம் வைத்துக் கொள்ள வேண்டும். அப்பொழுது அமைச்சர்களின் தயவை நாடும் எல்லாரும் தாங்களும் கோவிலுக்குச் சென்று தமிழில் அர்ச்சனை செய்ய ஆரம்பிப்பார்கள்.

இன்னொரு வழியாகவும் நாம் இந்தக் காரியத்தைச் சாதிக்கலாம். ஒவ்வொரு கோவிலிலும் தமிழ் அர்ச்சனைக்கு என்று ஒருவர், சம்ஸ்கிருத அர்ச்சனைக்கு என்று ஒருவர் என்று இரண்டு அர்ச்சகர்களுக்கு ஏற்பாடு செய்துவிட்டு, சம்ஸ்கிருத அர்ச்சகரை எப்பொழுது பார்த்தாலும் 'காஷுவல் லீவ்' அல்லது 'மெடிக்கல் லீ'வில் போகச் சொல்லி விடவேண்டும். அப்பொழுது அர்ச்சனை பண்ண வந்தவர்கள் தமிழில்தான் பண்ண வேண்டுமே ஒழிய, சம்ஸ்கிருதத்தில் முடியாது. இப்பொழுது கல்லூரி மாணவர்கள், ஆங்கில போதனா மொழி வகுப்பில் இடம் குறைவாக உள்ளதால், வேண்டா வெறுப்பாகத் தமிழ் போதனாமொழி வகுப்பில் புகவில்லையா, அது மாதிரி என்று வைத்துக் கொள்ளுங்களேன்!

ஆனால் தமிழின் மீதுள்ள ஆர்வம் காரணமாக நாம் ஒரு முக்கியமான விஷயத்தை மறந்து விட்டோம். நம் தமிழ் நாட்டுக் கோவில்களுக்குத் தமிழர்கள் மட்டுமா வருகிறார்கள்? தெலுங்கர்கள் வருகிறார்கள், வடக்கத்திக்காரர்கள் வருகிறார்கள், இன்னும் பல மொழிக்காரர்கள் வருகிறார்கள். ஆகவே இவர்களுடைய சௌகரியத்தை உத்தேசித்து இந்த அர்ச்சனை விஷயத்தில் மும்மொழித் திட்டத்தை அமலுக்குக் கொண்டு வந்தால் என்ன? இந்தி அர்ச்சனைகளுக்கும் ஏற்பாடு செய்தால் என்ன?

ஆனால் இந்தி ஆதிக்கத்தைக் கண்டு சீறும் அரசினர் இந்த மும்மொழித் திட்டத்துக்கு ஒப்புக் கொள்வார்களா என்பது சந்தேகம்தான்.

ஆனால் எந்த மொழி அர்ச்சனைக்கு ஏற்பாடு செய்தாலும், செய்யா விட்டாலும் உலக மொழியாகிய ஆங்கிலத்தில் அர்ச்சனைக்கு ஏற்பாடு செய்துதான் ஆக வேண்டும்.

வெளிநாட்டார் எத்தனை பேர் நம் கோவில்களைப் பார்க்க வருகிறார்கள்? அவர்கள் இப்பொழுதெல்லாம் சிற்பங்களைப் பார்த்து விட்டுப் போகிறார்களே அல்லாது அர்ச்சனை செய்வதில்லை. ஆங்கிலத்தில் அர்ச்சனை உண்டு என்று தெரிந்தால் அவர்கள் கட்டாயம் அர்ச்சனை செய்வார்கள். ஓர் அர்ச்சனைக்குப் பத்து ரூபாய் கட்டணம் கொடுக்கக் கூட அவர்கள் தயங்கமாட்டார்களாதலால், இதன் மூலம் கோவில் வரும்படியை அதிகரித்து, அதை மதச் சார்பற்ற வேறு ஏதாவது ஒரு காரியத்துக்குப் பயன்படுத்தலாம்.

இன்னொரு யோசனையும் இருக்கிறது. ஆனால் அதை இப்பொழுது சொல்ல முடியும் என்று தோன்றவில்லை. கடைக்குப் போய்ச் சமையலுக்குக் காய்கறி வாங்கிக்கொண்டு வராமல் இப்படி உட்கார்ந்து விட்டதால், என் மனைவி சரக எனக்கு அர்ச்சனை பண்ண ஆரம்பித்து விட்டாள்!




நாடோடி

# ஸ்ரீ கிருஷ்ண கான சபா (Regd.)

**தியாகராயநகர், சென்னை - 17 போன்: 442806 & 441953**

## கோகுலாஷ்டமி சங்கீத உற்சவம் '71

(ஜுலை, ஆகஸ்டு, செப்டம்பர் & அக்டோபர்)

### ஜுலை 31

**சனிக்கிழமை மாலை 6 மணிக்கு:**
சிட்டி பாபு (வீணை) ராமபத்ரன் - மிருதங்கம்

### ஆகஸ்டு

ஞாயிறு 1ந் தேதி: மாலை 3 மணிக்கு
**குமாரி கே. வி. சாருமதி, ஏ. கன்யாகுமாரி கே. சஞ்சீவி**

மாலை 5-45 மணிக்கு:
**எம். எல். வசந்தகுமாரி & பார்ட்டி**

சனி 7ந் தேதி: மாலை 6 மணிக்கு
**புல்லாங்குழல் ரமணி,** சந்திரசேகரன்
உபேந்திரன், திருவாரூர் நாகராஜன்

ஞாயிறு 8ந் தேதி மாலை 3 மணிக்கு:
**வீணை: குமாரி ஆர். எஸ். ஜெயலக்ஷ்மி**
டி. ஆர். சுப்பிரமணியம்.

* மாலை 5-45 மணிக்கு: **எம். எஸ். சுப்புலக்ஷ்மி**
அழகிரிசாமி. டி. கே. மூர்த்தி. விநாயகராம்
வி. நாகராஜன்

வெள்ளி 20ந் தேதி மாலை 6 மணிக்கு
**அய்யனூர் கிருஷ்ணன்,** எல். சுப்பிரமணியன்
கிருஷ்ண ஐயங்கார், ஆர். குருமூர்த்தி.

சனி 21ந் தேதி மாலை 6 மணிக்கு:
**டி.கே. ஜெயராமன்,** டி. ருக்மிணி, முருகபூபதி

ஞாயிறு 22ந் தேதி மாலை 3 மணிக்கு:
**மதராஸ் சகோதரர்கள் (ரகு & ரவி)**
ஏ. அனந்தகிருஷ்ணன், திண்டுக்கல் ராமமூர்த்தி

மாலை 5-45 மணிக்கு:
**லால்குடி ஜெயராமன் & ஸ்ரீமதி பிரமானந்தம்**
(இரு வயலின்கள்)
முருகபூபதி, கே. நாராயணசாமி

செவ்வாய் 24ந் தேதி மாலை 3 மணிக்கு:
**நாகர்கோயில் சகோதரர்கள்,** எஸ். பி. சேதுராமன், வி. தேவராஜன், ஆத்தூர் பழனிசாமி

மாலை 5-45 மணிக்கு:
**ராதா, ஜெயலக்ஷ்மி,** அழகிரிசாமி
மாவேலிக்கரை கிருஷ்ணன் குட்டி, ஆலங்குடி

வெள்ளி 27ந் தேதி மாலை 6-30 மணிக்கு:
**வி. ராமச்சந்திரன்,** வி. வி. சுப்பிரமணியம்
காரைக்குடி மணி

சனி 28ந் தேதி மாலை 6 மணிக்கு:
**ஸ்ரீரங்கம் கோபாலரத்னம்,** விக்கில் பாஸ்கரன்
நாகூர் அம்பி அய்யர்

ஞாயிறு 29ந் தேதி மாலை 3 மணிக்கு:
**ஏ. ராஜலக்ஷ்மி & ஏ. சரோஜா,** T. D. சங்கர ஐயர், தாணு

மாலை 5-45 மணிக்கு:
**நெடுநூரி கிருஷ்ணமூர்த்தி**
எம். எஸ். கோபாலகிருஷ்ணன், ரகு

திங்கள் 30ந் தேதி மாலை 7 மணிக்கு:
**மன்னார்குடி சாம்பசிவ பாகவதர் (ஹரிகதை)**

### செப்டம்பர்

வெள்ளி 3ந் தேதி மாலை 6-30 மணிக்கு:
**மணி கிருஷ்ணசுவாமி,** எம். எஸ். அனந்தராமன், ஏ. ஈசுவரன்

சனி 4ந் தேதி மாலை 6 மணிக்கு:
**எம். டி. ராமநாதன்,** கிருஷ்ணன், ராமபத்ரன்

ஞாயிறு 5-ந் தேதி மாலை 3 மணிக்கு:
**எஸ். சீதா, ஏ. லலிதா, என். எஸ். ராஜம்.**

மாலை 5-45 மணிக்கு:
**புல்லாங்குழல் மாலி,** வீரராகவன், சிவராமன்

வெள்ளி 10ந் தேதி மாலை 6-30 மணிக்கு:
**புரபஸர் B. ராஜம் ஐயர்,** வி. தியாகராஜன்
காரைக்குடி கிருஷ்ணமூர்த்தி

சனி 11ந் தேதி மாலை 6 மணிக்கு:
**டி. என். கிருஷ்ணன்** (தனி வயலின்)
சங்கரன், விநாயகராம்

ஞாயிறு 12ந் தேதி மாலை 3 மணிக்கு:
**தென்காசி முத்துசுவாமி & துரைசுவாமி**
காரைக்குடி எம். எஸ். மணி
காணடுகாத்தான் ராஜாராமன்

* மாலை 5-45 மணிக்கு:
**செம்மங்குடி,** லால்குடி, சிவராமன்

வெள்ளி 17ந் தேதி மாலை 6-30 மணிக்கு:
**சிக்கில் சகோதரிகள் (குஞ்சுமணி & நீலா)**
(புல்லாங்குழல்) சாலக்குடி நாராயணசாமி
உபேந்திரன்

சனி 18ந் தேதி மாலை 6 மணிக்கு:
**பாலமுரளி கிருஷ்ண,** கோயமுத்தூர்
பி. தக்ஷிணாமூர்த்தி, சங்கரன்

ஞாயிறு 19ந் தேதி மாலை 3 மணிக்கு:
எஸ். எஸ். பத்மஜா, நரசிம்மமூர்த்தி
நாகை சுந்தரராஜன்

மாலை 5-45 மணிக்கு: **மதுரை சோமு**
எம்.எஸ்.கோபாலகிருஷ்ணன்,ரகு,வியாமசுந்தர்

சனி 25ந் தேதி மாலை 6 மணிக்கு:
**சீதாலக்ஷ்மி வெங்கடேசன்,** துவாரம்
மங்கதாயாரு, தஞ்சை சிவப்பிரகாசம்

ஞாயிறு 26ந் தேதி மாலை 3 மணிக்கு:
**வசந்தா சிவராமன், ராதா சுந்தரேசன்**
பி. ஸ்ரீநிவாஸன்

மாலை 5-45 மணிக்கு:
**R. வேதவல்லி,** ஏ. லலிதா, வி. ரங்கநாதன்

செவ்வாய் 28ந் தேதி மாலை 3 மணிக்கு:
**ஏ. எல். செல்லா,** டி. கே. பத்மநாபன்
குற்றாலம் விசுவநாத ஐயர்

மாலை 5-45 மணிக்கு: **தேவகி ரங்கப்பா,** பாபநாசம்
பாலசரஸ்வதி, திண்டுக்கல் ராமமூர்த்தி

புதன் 29ந் தேதி மாலை 3 மணிக்கு:
**ராதா வாரியர் & எம். கே. விசாலாக்ஷி**
ஏ. கன்யாகுமரி, குற்றாலம் விசுவநாத அய்யர்

மாலை 5-45 மணிக்கு: **எம். ஜனார்த்தனன் - ஸிதார்**
சுந்தருமார் - தபேலா, **வி. ராகவன் - வீணை**
குருவாயூர் துரை - ஜுகல் பந்தி

அக்டோபர் 1ந் தேதி வெள்ளி மாலை 7 மணிக்கு: **டி. எஸ். பாலகிருஷ்ண சாஸ்திரிகள் - ஹரிகதை**

அக்டோபர் 2ந் தேதி சனி மாலை 3 மணிக்கு: **ஜி. கே. ராஜேசுவரி,** காஞ்சி ஜனார்த்தனம், பாலக்காடு ராமநாதன். மாலை 6 மணிக்கு: நாதஸ்வரம் திருவெண்ணெய்நல்லூர் நடராஜ சுந்தரம் சகோதரர்கள் (ஸ்பெஷல் தவுல்கள்) யாழ்ப்பாணம் தக்ஷிணாமூர்த்தி, வடபாதிமங்கலம் தக்ஷிணாமூர்த்தி

---

சீசன் டிக்கட்டுகள்: ரூ. 100/-60/-40 & 25/- தினசரி டிக்கட்டுகள்: ரூ. 10/-5/-3 & 2/- *ரூ. 15/-10/-5 & 3/-




## உஷாஞ்சலி

உள்ளுறை பொருளாகத் திகழும் இறைவன், மாந்தரின் மனத்துள் புகுந்து என்னவெல்லாம் விந்தைகள் செய்கிறான்! தான் இருப்பதைத் தன் அலகிலா விளையாட்டினாலேயே காட்டி மாந்தரைப் பக்தி மார்க்கத்தில் இட்டுச் செல்கிறான். அந்தப் பக்தியும் எப்படி? உள்ளத்தால் துய்த்து உணர முடியுமே ஒழியப் பிறரிடம் பாடம் கேட்டு வருவதா? நம் தமிழ் நாட்டிலே ஆண்டாள் தோன்றி ஆண்டவனின் அடி சேர்ந்தாள். அவளது மறு பிறவியோ என்று கூறும் அளவுக்கு மீரா வாழ்ந்து பக்தி வெள்ளத்தை ஆற்றொழுக்கில் பரவவிட்டிருக்கிறாள். இது வரலாறு கூறும் உண்மை. ஸ்ரீமதி இந்திரா தேவியின் இருதயத்திலே மீரா புகுந்து இறைவனது பெருமையை உலகத்துக்கு எடுத்துக் காட்டுவது போலப் பக்திச் சுவை சொட்டும் பாடல்களை இசைத்திருக்கிறாள். அவற்றில் நூறு இந்தத் தொகுப்பில் இடம் பெற்றுள்ளன.

'ஆண்டவனிடம் அன்பு செலுத்தாதே. அவன் அடியாரிடம் அன்பு செலுத்து. ஆண்டவனை நேசித்தால் அவன் உனக்குச் சொத்தும் சுதந்திரமும் மட்டுமே தருவான். அவன் அடியாரை வேண்டினால் அவர்கள் அவனையே உனக்குத் தருவார்கள்' என்பது கபீர்தாசரின் வாக்கு. ஸ்ரீமதி இந்திரா தேவி அவர்கள் இந்தக் காலத்தில் பக்தி யோகம் புரியும் புண்ணியசாலிகளில் ஒருவர். உள்ளத்து உணர்வுகளைச் சொற்களில் வடிக்கும்போது மீரா இவருக்குக் கபீர்தாசர் கூறுவதுபோல் ஆண்டவனையே சாட்சாத்காரம் செய்து வைத்திருக்கிறார் என்றுதான் கூற வேண்டும். எனவே தான் இவரது பக்திப் பாக்களில் அநுபூதியின் கோலம் தெற்றென விளங்குகிறது. 'மனம் ஒரு பாவி. எனக்கும் தெரியும் உனக்கும் தெரியும், ஆண்டவனே! பாவம் பெரிதா, பிரேமை பெரிதா? — சொல்லேன் உள்ளுறை பொருளே! நன்மையையும் தீமையையும் எடை போட்டுச் சொல்லேன்! அன்புக்குத் தானே உன் ஆதரவு?' என்று மீராவைப் போலவே கேட்கும் இந்திரா தேவியின் வாழ்க்கையும் மீராவை ஒத்ததுதான்!

ஸ்ரீமதி இந்திரா தேவியின் பிறந்த நாளைக் கொண்டாட இவரது உள்ளத்திலிருந்து ஊறிய பாக்களையே மாலையாகக் கோத்து ''உஷாஞ்சலி'' செலுத்தியிருக்கிறார்கள், வெல்லப் பிள்ளையாரைக் கிள்ளி அவருக்கே நிவேதனம் செய்வது போல. இதை ஸ்ரீ திலீப் குமார் ராய் வெகு அழகாகக் குறிப்பிடுகிறார்:

'கங்கையைக் கங்கை நீரைக் கொண்டே தானே வழிபடுகிறோம். அதுபோல இவரது கவிதைகளாலேயே இவரை வாழ்த்துகிறோம்.'

கிடைக்குமிடம்: **HariKrishna Mandir, Poona-16, Price Rs. 3-00.**

## Saint Gurudayal

நாம் பெற்ற இந்திரிய அதீதமான அநுபவங்களை மறைத்துக் கொண்டு அன்புள்ளம் படைத்த எளிய பக்த கவியாக வாழ்ந்தவர் காலஞ்சென்ற குருதயாள் மல்லிக். ஆனால் அவர் மறைந்தாலும் மறைகிற பாடாக இல்லை அவரது பௌதிக அதீத அநுபவங்கள். மல்லிகைப் பூ தன் மணம் பரவாமல் தடுத்து நிறுத்திக் கொள்ள முடியுமோ? குரு தயாள் மல்லிக்கின் கதையும் — அல்லது கவிதையும் — அப்படியே ஆயிற்று. ரவீந்திர நாத டாகுருடனும், மகாத்மா காந்தியுடனும் நெருங்கிப் பழகி, முன்னவர் அழகிலே கண்ட சத்தியத்தையும், பின்னவர் சத்தியத்திலே கண்ட அழகையும் தமதாக்கிக் கொண்டார் குரு தயாள்; தாகுரின் வழியிலே கவிதைகள் தந்தார்; காந்திய வழியிலே மக்கட் சேவை செய்தார். இவரை நுணுகி நுணுகி அநுபவித்த ''தாதா'' திலீப் குமார் ராய், தமக்கே உரிய கவி நயம் கொஞ்சும் இதய மொழியில் இந்த நூலைப் படைத்திருக்கிறார். புனிதமும் எளிமையும் படைத்த ஒரு நல்ஜீவனைப் பற்றிப் படித்த நிறைவு ஏற்படுகிறது.

**Published by Dr. K. G. Phulwar, 23, Sindhi Society, Chembur, Bombay-71 Price Rs. 3-50.**

## உபநயன மந்த்ரார்த்தங்கள்

வேத அத்யயனத்துக்கு அதிகாரமுள்ள பாலகனைக் குருவிடம் அனுப்பிவைத்து பிரம்மசரிய ஆசிரமத்தை அநுஷ்டிக்கச் செய்ய முதற்படி உபநயனம் என்ற உயர்ந்த சம்ஸ்காரம்.

பால பருவத்திலேயே ஒழுக்கத்தையும், தெய்வ பக்தியையும், அறிவுத் தேட்டத்தையும், ஆத்ம நாட்டத்தையும் ஏற்படுத்தும் அற்புத மந்திரங்கள் உபநயன காலத்தில் கூறப்படுகின்றன. இவற்றுக்குக் காலஞ்சென்ற தர்மரக்ஷாமணி ஸ்ரீ கே. பாலசுப்பிரமணிய அய்யரவர்கள் ''காமகோடி பிரதீப''த்தில் அழகுபட எழுதி வந்த தமிழ் — ஆங்கில விளக்கங்கள் இன்று புத்தகமாக வந்திருக்கிறது. பிரம்மோபதேசம் பெற இருக்கும் குழந்தைகளும், அவர்களின் பெற்றோரும் அவசியம் படித்துப் பயன்பெற வேண்டிய நூல். இந்தப் புத்தகத்தின் முன்னுரையில் ஆசிரியரவர்கள், கலியாணத்தைக் காலம் கடத்தி நடத்துவதற்கும், அதில் உற்சவ கோலாகலம் செய்வதற்கும் உள்ள ஒரு சிறிது ''நியாயம்'' கூட, உபநயனத்தைக் காலம் கடத்திச் செய்வதற்கும், அதை உற்சவமாக்கி அமர்க்களம் செய்வதற்கும் இல்லை என்று கூறியிருப்பது குறிப்பாகக் கவனத்துக்குரியது.

வெளியீடு: ஸ்ரீ காமகோடி கோசஸ்தானம்; **4, ஃப்ரான்சிஸ் ஜோஸப் தெரு, சென்னை—1, விலை ரூ. 1.50.**

INDIAN BANK

THIAGARAYANAGAR (Madras)

# மாதந்தோறும் வட்டி தரும் எங்கள் திட்டம் உங்களுக்கு உற்சாகம் மூட்டும்

இந்தியன் பாங்கிலுள்ள உங்கள் டிபாசிட்டுகளுக்கு இப்பொழுது மாதா மாதம் வட்டி பெற்றுக் கொள்ளலாம். இதற்காக நீங்கள் செய்ய வேண்டியது ஒன்று தான். எமது 284 கிளைகளில் ஏதாவது ஒன்றில் ஒரு பிரத்தியேக டிபாசிட் கணக்கு ஆரம்பித்து, மாதா மாதம் நீங்கள் பெறக்கூடிய வட்டித் தொகைகளை இந்தக் கணக்கில் வரவு வைக்கும்படி கோர வேண்டும்.

**வட்டி விகிதங்கள்:**

| | |
|---|---|
| **1** ஆண்டு மற்றும் அதிகமானல் | **6%** |
| **2** ஆண்டுகள் மற்றும் அதிகமானல் | **6½%** |
| **3** ஆண்டுகளுக்கு மேல் | **7%** |
| **5** ஆண்டுகளுக்கு மேல் | **7¼%** |



## இந்தியன் பாங்க்

(இந்திய அரசினருக்கு முற்றிலும் சொந்தமானது)
இந்தியா முழுவதிலும் 284 கிளைகள் உங்களுக்கு சேவை புரிகின்றன.

ELEGANT




தியோடர் டிரைசர் என்னும் எழுத்தாளர் 'டிலினேட்டர்' என்னும் பத்திரிகைக்கு ஆசிரியராக நியமிக்கப்பட்டதும் செய்த முதல் காரியம், பரிசீலனைக்காக வைத்திருந்த தமது இரு கதைகளையும் 'வருந்துகிறோம்' சீட்டுடன் தமது வீட்டு முகவரிக்கு அனுப்பியதுதான்.

எர்ஸ்கின் கால்ட்வெல் பத்திரிகைத் தொழிலைப் பற்றிக் கூறுவதாவது : 'நான் அந்த நாட்களில் ஒரு தினத்தாளில் ஊழியம் பார்த்து வந்தேன். ஏதாவது விபத்து அல்லது விந்தை நிகழ்ச்சி நடந்தால் நான் அதைச் சாங்கோபாங்கமாக எழுதி உதவி ஆசிரியரிடம் தருவேன். முந்நூறு -- நானூறு வரிகள் கொண்ட அந்தச் செய்தியைப் படிக்கும்போதே அவரது பென்சில் இயங்கும். பத்துப் பன்னிரண்டு வரிகள் மீதந்திருந்தால் அது பெரிய காரியம். அதை என்னிடம் திருப்பித் தந்து, 'இதையும் பாதியாகக் குறைத்து எழுதிக் கொண்டு வா' என்பார் அவர்.

எழுத்துப் பற்றி எனக்கு யதார்த்த ரீதியில் கிடைத்த அறிவுரை இது. இதைக் காட்டிலும் சிறந்த அறிவுரை எனக்கு இதுவரையில் வாழ்வில் கிட்டியதே இல்லை. - ரா. கி.



மூன்று பிளாஸ்டிக் ஸர்ஜரி செய்யும் டாக்டர்கள் உரையாடிக் கொண்டிருந்தார்கள்.

"நான் கையொடிந்த ஒருவருக்குச் சிகிச்சை செய்து சரி செய்து விட்டேன். இன்று அவர் சிறந்த டென்னிஸ் ஆட்டக்காரராகத் திகழ்கிறார்!' என்றார் ஒருவர்.

"நான் கால் ஒடிந்த ஒருவருக்குச் சிகிச்சை செய்தேன். ஓட்டப் பந்தயத்தில் அவரை வெல்பவர் இன்னும் பிறக்கவில்லை!" என்றார் இன்னொருவர்.

இதைக் கேட்ட மூன்றாமவர், "நான் ஓர் ஓநாயின் முகத்தில் முறுவலை வரவழைத்தேன், சஸ்திர சிகிச்சை செய்து. அதைப் போல் தேர்ந்த அரசியல்வாதியைக் காண்பது அரிது" என்றார்.

- கல்பனாவியாஸ்.

★

பாரிஸ் நகரைச் சேர்ந்த ஜெனமிலியர் என்பவர் 'பாரிஸ் ரேடியோ' மீது நாலாயிரம் பிராங்க் நஷ்டஈடு கோரி வழக்குத் தொடர்ந்துள்ளார்! காரணம்? ரேடியோவில் ஒலிபரப்பப்பட்ட உடற்பயிற்சிப் பாடத்தின்படி இவர் உடற்பயிற்சியில் இறங்கினார். கரங்களைக் கால்களாக்கித் தலைகீழாக இவர் நிற்கும்போது, ரேடியோவில், "இரண்டு கைகளையும் நீட்டுங்கள்!" என்று உடற்பயிற்சி போதகர் தவறாகச் சொல்லிவிட்டார். அவர் சொன்னதைச் செய்ததில் ஜெனமிலியருக்கு மண்டையில் அடிபட்டுவிட்டது! இதற்காகத்தான் ஆஸ்பத்திரியில் இருந்தபடி நஷ்ட ஈடு வழக்குத் தொடுத்திருக்கிறார் ஜெனமிலியர். - சம்பத் குமார் - ஆதாரம்: 'நியூஸ்டைம்ஸ்'






பிளாஸ்டிக் தொழிற்சாலை, செயற்கை நூல் தொழிற்சாலை, பெட்ரோ இரசாயனத் தொழிற்சாலை போன்றவற்றிலிருந்து வெளியாகின்ற கழிவு நீர் இது காறும் அருகேயுள்ள மாபெரும் ஏரிகளிலோ அல்லது ஆறுகளிலோ வடியுமாறு ஏற்பாடுகள் இருந்து வந்தன. இதனால் ஆறு ஏரிகளில் வாழும் மீனினங்கள் மிகவும் பாதிக்கப்படுகின்றன என்பதையும், அந்நீரை அருந்தும்போதோ அல்லது மீன்களைப் பிடித்துச் சமைத்து உண்ணும் போதோ மனிதனின் ஆரோக்கியமும் கெடுகிறது என்பதையும் கண்டறிந்திருக்கின்றனர் விஞ்ஞானிகள். விஞ்ஞான வளர்ச்சியினாலும் தொழில் வளப் பெருக்கத்தினாலும், காற்று மண்டலம் மட்டுமின்றி நீர் நிலைகளும் இவ்வாறு பாழாவதை எதிர்த்துப் பெரிய இயக்கமே தோன்றியிருக்கிறது மேலைநாடுகளில்.

இப்பிரச்னையைச் சமாளிக்க மேற்கு ஜெர்மனியில் சமீபத்தில் ஒரு புரட்சிகரமான சுத்திகரிப்பு நிலையத்தை உருவாக்கியிருக்கிறார்கள். இந்நிலையத்தில் பாக்டீரியா கலந்த களிமண் சகதியில் சாக்கடைத் தண்ணீரைச் செலுத்திச் சுத்தம் செய்கிறார்கள். ஐரோப்பாவிலேயே பெரியதான இந்தச் சுத்திகரிப்பு நிலையம் பத்து இலட்சம் மக்கள் வாழக்கூடிய ஒரு நகரின் சாக்கடைத் தண்ணீரைச் சுத்தம் செய்யக் கூடிய ஆற்றல் வாய்ந்தது. பெரிய பெரிய தொழிற்சாலைகளிலிருந்து வெளியாகும் 65,000 கன மீட்டர் கழிவுநீரை இந்நிலையம் தினசரி சுத்தம் செய்யும். முதலில் இரசாயனப் பொருள்களைக் கலந்து ஆறு பெரிய தடாகங்களில் சுத்தம் செய்தபின்னர், இந்த அழுக்குத் தண்ணீர், பதின்மூன்று களிமண் சகதி நிறைந்த தடாகங்களில் கொட்டப்படுகிறது. இங்கு கோடிக்கணக்கான பாக்டீரியாக்கள் விடப்படுகின்றன. அழுக்குத் தண்ணீரில் உள்ள தாவர அழுக்குகளை உணவாக இந்த பாக்டீரியாக்கள் உட்கொண்டு விடுகின்றன.

பாக்டீரியா கலந்த களிமண் சகதியுடனும், ஏராளமான பிராண வாயுவுடனும் அழுக்குத் தண்ணீரை ஆறு மின்சார மோட்டார் சாதனங்கள், ஒன்றாகச் சேர்த்துக் கலக்குகின்றன. எட்டு மணி நேரம் இவ்வாறு கலக்கியபின்னர், இந்தத் தண்ணீர், எட்டுத் தடாகங்களுக்கு அனுப்பப்படுகிறது. இங்கு இரண்டரை மணி நேரம் இருந்த பின்னர், தண்ணீர் வடிகட்டப்பட்டுக் கொதிக்க வைக்கப்படுகிறது.

இவ்வாறு சுத்தம் செய்த தண்ணீர், ரைன் ஆற்றில் கலக்கிறது. இந்தத் தண்ணீரால், மீன்களுக்கு எவ்விதத் தீங்கும் விளைவதில்லை. குடித்தாலும் கெடுதி ஏற்படுவதில்லை.




இந்தத் தண்ணீர் சுத்திகரிப்பு நிலையம், பெரும்பாலும் தானாகவே இயங்குகிறது. முப்பது மனிதர்கள் இருந்தால் போதும், இதனைப் பராமரிக்க! -பூ.பி.எஸ்

# 'தௌஸண்ட் ருபீஸ் காஷ்!'

வ.சா.நாகராஜன்



'ஹெட்குக்' ராமய்யர் குஞ்சாலாடு பிடித்துக் கொண்டிருந்தார். கல்யாணத்துக்கு முதல் நாளான அன்று அந்த வீட்டின் முன் பக்கம் இருந்த பரபரப்பும் ஓட்டமும் பாட்டமும் பின் பக்கம் இருந்த சமையற்கட்டில் இல்லை. சாப்பாட்டுக்காக என்று இருந்த நீண்ட ஹாலில் மின்விசிறியின் அடியில் உட்கார்ந்து கொண்டு அவர் சாவதானமாக உருண்டைகளைப் பிடித்துக் கொண்டிருந்தார்.

கல்யாணக் கூடத்திலிருந்து சமையற்கட்டுப் பக்கம் வந்த கிருஷ்ண சாஸ்திரிகள், ராமய்யர் உட்கார்ந்திருப்பதைப் பார்த்ததும் ''நமஸ்காரம்'' என்று கைகூப்பி வணங்கிக் கொண்டே நெருங்கினார். எதிரில் இருந்த பலகையைக் காட்டியதும் அதில் உட்கார்ந்து கொண்டார் சாஸ்திரிகள்.

''என்ன சௌக்கியமா?'' என்று அவராகவே ஆரம்பித்தார்.

''உம்...'' என்று தலையை மாத்திரம் ஆட்டிவிட்டு அவரைப் பாராமல் காரியத்தில் ஈடுபட்டார் ராமய்யர்.

சாஸ்திரிகளும் பெரிய தட்டிலிருந்து உதிரிக் குஞ்சாலாடை எடுத்து உதவி செய்யும் பாவனையில் அவரும் உருண்டை பிடிக்க ஆரம்பித்தார்.

''அப்புறம்... நாள் ஓடிக் கொண்டிருக்கு... வைகாசி முடிஞ்சு, ஆனியிலேயும் நாலைந்து முகூர்த்தம் ஆயிடுத்து. நீங்க மனசு வைக்கக் கூடாதா?'' என்று சாஸ்திரிகள் மெதுவாக ஆரம்பித்தார்.

''நான் என்ன பண்ணணும்?''

''ஆனி இருபத்தைஞ்சிலே முகூர்த்தம் இருக்கு. ராதையின் நட்சத்திரத்துக்கும் சங்கரன் நட்சத்திரத்துக்கும் பொருத்தமான முகூர்த்தம். சாமிப்பிள்ளைத் தெரு சத்திரமும் அன்னைக்குக் காலியாக இருக்கு. உங்களையும் ஒரு வார்த்தை கேட்டுக் கொண்டு அங்கே வந்து அட்வான்ஸ் கொடுக்கிறதாகச் சொல்லியிருக்கேன்...''

''சரி.''

''மத்தப்படி... நகை, நட்டு, பாத்திரம், பண்டம் எல்லா

விஷயங்களிலும் நீங்க சொல்றதுக்குக் கட்டுப்படறேன்...'' என்றார் சாஸ்திரிகள்.

''சரி...''

''ஏதோ என் சக்திக்கு முடிஞ்சவரையிலே கல்யாணத்தையும் பண்ணிவிடறேன்...''

''நானு மாட்டேன் என்கிறேன்?''

''ஆனி இருபத்தைஞ்சிலே வைத்துக் கொண்டால் எல்லாருக்கும் சௌகரியமாக இருக்கும்...'' சாஸ்திரிகள் தயங்கினார். ''அதிலே ஒரே ஒரு சிரமம். உங்களுக்குக் கொடுக்க வேண்டிய வரதட்சிணைப் பணம் கொஞ்சம் குறைகிறது... நானூறு ரூபாய்... அறுநூறு ரூபாயை பாங்கிலே அப்படியே போட்டிருக்கிறேன். மீதி நானூறையும் சேர்க்கிறதுக்குள்ளே ஆடி பிறந்துடும் போல இருக்கு...''

''மீதியையும் சேர்த்துக் கொண்டு, கல்யாணத்தை ஆவணியிலே வைத்துக்கொள்கிறது...''

''உங்களுக்குத் தெரியாததில்லே.....கல்யாணம் நிச்சயம் பண்ணிவிட்டுக் கிட்டத்தட்ட ஒரு வருஷத்துக்கு மேலே முகூர்த்தத்தை ஒத்திப் போட்டுக் கொண்டிருக்கோம். இந்த மெட்ராஸிலே நமக்கு ஏத்த சத்திரம் கிடைக்கிறபோது விடலாமா? நானூறு ரூபாய்க்காகப் பார்க்கக் கூடாது. அதையும் கொடுத்துடறேன். உடனே கொடுக்க முடியாமல் இருக்கு. கல்யாணம் ஆகி, நாலஞ்சு மாசத்திலே...''

''எத்தனை தடவை சொன்னாலும் உங்க மனசிலே நான் சொல்றது படமாட்டேன் என்கிறது. நான் பெரிசா என்ன கேட்கிறேன்? மத்த சீர்வரிசைகளைப் பத்தியெல்லாம் கூட நான் அவ்வளவாகக் கவலைப்படல்லே. 'தௌஸண்ட் ரூபீஸ் கேஷ்!' இது இந்தக் காலத்திலே பெரிய தொகையா? ஒண்ணுமில்லா நவநட்சியெல்லாம் நாலாயிரம் அஞ்சாயிரம் என்கிறான். நான் வேணுமானு உங்க கண்ணுக்குச் சமையல்காரன்னு மட்டமாக இருக்கலாம். என் பிள்ளை கல்லூரிக்குப் போய்ப் படிச்சவன். முந்நூறு ரூபாய் சம்பாதிக்கிறான். அவன் கல்யாணத்துக்கு நான் ஆஃப்டர் ஆல் ஒரு தௌசண்ட் ரூபீஸ் கேட்கக்கூடாதா?''

''அது அதிகம்னு நான் சொல்லல்லே... உங்க பிள்ளைக்கு, என் பெண்ணைவிடப் பெரிய இடங்கள் வரும். அதையும் இல்லேங்கல்லே... என்னையும் கேவலம் சாஸ்திரிகள்தானேன்னு நீங்க நினைச்சுடக் கூடாது. என் வார்த்தையிலே நம்பிக்கை வைச்சு இந்தக் கல்யாணத்தை நடத்திக் கொடுக்கணும். பாக்கிப் பணத்தை அப்புறமா...''

''சொன்னதையே சொல்லிக் கொண்டிருந்தால் என்ன பிரயோசனம்? ரௌண்ட் சம்மா ஆயிரம் ரூபாய். ஒரு பெரிய நோட்டை வையுங்கோ. நாளைக்கே முகூர்த்



**தத்தை வைச்சுக்கலாம். நாள் நட்சத்திரத்தைப் பற்றிக்கூட எனக்குக் கவலையில்லை...''**

பெண்ணைப் பெற்றவர் கையைப் பிசைந்தார். மேலே பேச முடியாதபடி திணறினார். நல்லவேளையாக முன் பக்கத்திலிருந்து ஒருவர் வந்து அவரை அழைப்பதாகச் சொல்லவே, ''இதோ வந்து விட்டேன்'' என்று சொல்லிக்கொண்டே எழுந்தார்.

சமையல் ராமய்யரும் சாஸ்திரிகளும் இருபத்தைந்து வருஷத் தொழில் முறை நண்பர்கள். நூற்றுக் கணக்கான கல்யாணங்களை அவரவர்கள் தொழில் முறையில் நடத்திக் கொடுத்தவர்கள். ராமய்யருக்கு ஒரு பிள்ளை; சாஸ்திரிகளுக்கு ஒரு பெண். அவர்கள் கல்யாணம் இருபது வருடங்களாகவே இருவரும் பேசிக் கொண்டிருந்த விஷயம். வேடிக்கையாக ஆரம்பித்த பேச்சு நடைமுறைக்கு வந்தபோது வெளி உலக விவகாரங்கள் கல்யாணத்துக்கு முட்டுக்கட்டை போட்டன. கல்யாணத்தை நடத்தி, நகை, சீர் வரிசைகளையும் குறைக்காமல் மேற்கொண்டு கையில் ஆயிரம் ரூபாய் 'ஹார்டு காஷா'க் கொடுக்க வேண்டும் என்று கண்டிப்பாக இருந்தார் பிள்ளையைப் பெற்றவர். அரை ரூபாயும் ஒரு ரூபாயும் இரண்டு ரூபாயுமாகச் சம்பாதிக்கும் சாஸ்திரிகள் குருவி சேர்ப்பது மாதிரி பெண் கல்யாணத்துக்காகப் பணம் சேர்க்கலானார். கல்யாணச் செலவுக்கு என்று தனியாக வைத்தது போக ராமய்யர் கேட்ட 'ஹார்டு காஷ'க்கு அறுநூறு ரூபாய்தான் சேர்ந்திருந்தது. நானூறு ரூபாய் பாக்கி. 'பாக்கி கொடுக்க வேண்டிய நானூறு ரூபாய்க்கு புரோ நோட்டு வேண்டுமானாலும் எழுதிக் கொடுக்கிறேன். முதலில் நாள் தள்ளிப் போகாமல் கல்யாணம் முடியட்டும்' என்று சாஸ்திரிகள் கெஞ்சோ கெஞ்சு என்று கெஞ்சினார். ராமய்யர் இறங்கி வரவில்லை.

**ஆ**னி முடிந்து விட்டது. அதுவரை இன்னும் நான்கைந்து கல்யாணங்களில் ராமய்யரும் சாஸ்திரிகளும் சந்தித்துக் கொண்டார்கள். சாஸ்திரிகள் விடாமல் கெஞ்சிப் பார்த்தார். ராமய்யர் 'தௌசண்ட் ருபீஸ் பிரச்னை'யை விடவேயில்லை.

ஆடி மாதம் இருவருக்குமே ஒய்வு. சாஸ்திரிகள் மீதி நானூறு ரூபாயை இட்டு நிரப்ப எத்தனையோ முயற்சி செய்து பார்த்தார். நடக்கவில்லை.

ஆவணி பிறந்து முகூர்த்தங்கள் நடந்து கொண்டிருந்தன.

பதினைந்து தேதிக்குப் பிறகு ஒரு நாள், சாஸ்திரிகள் பரபரப்புடன் ராமய்யர் வீட்டுக்கு வந்தார். வந்த அவசரத்தில் ஆசுவாசம்கூடச் செய்து கொள்ளாமல் ஆரம்பித்தார். ''கடவுள் கிருபையால் எல்லாம் கூடிவருகிறது. நீங்கதான் மனசு வைக்கணும் 'சந்தனம்' பத்திரிகை ஆசிரியர் சந்தானம் பெண்ணுக்குக் கல்யாணம். இந்த மாதம் இருபத்தெட்டாம் தேதி வியாழக் கிழமை அபட்ஸ்பரியிலே! முதல் நாள் புதன் கிழமையும் முகூர்த்த நாள். தொடர்ந்து இரண்டு முகூர்த்த நாள் சேர்ந்து வரவேண்டும்னு தான் அந்தத் தேதியில் வைச்சிருக்கார்... அவர்கள் வீட்டுக் கல்யாணத்துக்கு முதல் **நாள் ஒரு தர்மக் கல்யாணம் பண்ணவைக்க வேண்டும் என்று பிரார்த்தனையாம்.** சந்தானம் 'உம்ம பெண் கல்யாணத்தை அந்தத் தேதியிலே வைத்துக் கொள்கிறீரா?' என்று கேட்டார். சரி என்று சொல்லிவிட்டேன். அபட்ஸ்பரியில் என் பெண்ணுக்கும் உங்க பிள்ளைக்கும் ஆவணி இருபத்தேழாம் தேதி கல்யாணம். நாம நினைக்கக்கூடப் பார்க்க முடியாத அதிருஷ்டம்! 'சரி'ன்னு ஒரு வார்த்தை சொல்லுங்கோ. பத்திரிகை அடிக்கக்கூட நாள் இல்லை. நாமாக ஏற்பாடுகள் செய்ய ஆரம்பித்தால் முடியாது. எல்லாம் அவர்கள் ஏற்பாடு. நாம் போக வேண்டியது, முகூர்த்தத்திலே கல்யாணத்தை நடத்திக் கொள்ள வேண்டியது, வரவேண்டியது. அவ்வளவுதான்.''

''கேட்கிறதுக்கு ரொம்ப நன்றாக இருக்கு. அபட்ஸ்பரியிலேதான் என் பிள்ளைக்குக் கல்யாணம் நடக்கணும்னு ஆசைப்படல்லே. நடந்தாலும் சரிதான். அது சரி... அந்த... காஷ்....?''

சாஸ்திரிகள் கையைப் பிசைந்தார். ''தயவு செய்து நீங்க பெரிய மனசு பண்ணணும். ஒரு முந்நூறு ரூபாய்க்கு என்னை நம்ப மாட்டேளா...? நான் சொன்னால் தந்துவிட மாட்டேளா? இப்ப எழுநூறு ரூபாய் இருக்கு. இப்பவே வேண்டுமானாலும் உங்க கையிலே கொடுத்து விடறேன்...''

''உங்க பெண்ணுக்கு அபட்ஸ்பரியிலே கல்யாணம் நடக்கணும். ஆனா, காஷ் ஒரு ஆயிரம் ரூபாய் கொடுக்கக் கூடாது. அவ்வளவுதானே...?''

ராமய்யரின் குரல் உயர்வதைக் கவனித்தார் சாஸ்திரிகள். ''நீங்க கோபிச்சுக்கக்கூடாது. கல்யாணச் செலவுக்கு நான் வைத்துக் கொண்டிருந்த பணம் எவ்வளவு என்று சந்தானம் கேட்டார். சொன்னேன். அதை அப்படியே கொடு. வீண் செலவு செய்துவிடாதே. பெண்ணுக்கு நகையாகப் போட்டுவிடலாம்'' என்று கேட்டு வாங்கிச் சங்கிலியாகப் போட்டுவிட்டார். எப்படியோ காஷாகக் குறைந்தாலும் பவுனாக உங்களைச் சேர்ந்து விட்டது...... அதனாலே...''

''அதெல்லாம் ஒன்றும் என்னிடம் பேச வேண்டாம். அபட்ஸ்பரியிலேதான் என் பிள்ளைக்குக் கல்யாணம் பண்ணணும் என்று உம்மிடம் கேட்டேனா? சங்கிலி போடு என்று கேட்டேனா? நான் கேட்டது என்ன? ஆயிரம் ரூபாய் ரொக்கம்! அவ்வளவுதான். என் பிள்ளை கல்யாணத்திலே தௌஸண்ட் ருபீஸைக் கண்ணாலே பார்க்கா விட்டால் பின்னே எப்போப் பார்க்கப் போகிறேன்? ஏதோ என் ஆசை. பிள்ளை கல்யாணத்தில் தௌஸண்ட் ருபீஸை இந்தக் கையாலே வாங்கி, பாங்கிலே எனக்கென்று ஓர் அகௌண்ட் ஓபன் பண்ணி, அதிலே 'ராமய்யர் ஆயிரம் ரூபாய்' என்று வரவு வைக்கணும்... சரி... என்றைக்கு ஆயிரம் ரூபாய் சேருகிறதோ, அப்போ வந்து பாரும். அதுவரையிலே என் பிள்ளைக்குக் கல்யாணம் ஆகாமல் இருந்தால் மேற்கொண்டு அப்போ பேசிக்கலாம்...''

அபட்ஸ்பரியை நினைத்து உற்சாகத்துடன் வந்த சாஸ்திரிகள் நிராசையுடன் இடத்தை விட்டு எழுந்திருந்தார். அவர்கள் பேசிக்

# க்ரைலின் கரெஸ்பாண்டென்ஸ் ஸ்கூலில் சேர்ந்து

## துணியில் சித்திரம் தீட்டக் கற்றுக் கொள்ளுங்கள்

தனிப்பெரும் அழகுடன் திகழும் திரைகளும், குஷன்களும், சிறந்த வேலைப்பாடுகளுடன் மிளிரும் கவர்ச்சிமிகு உடைகள், ஒவ்வொரு அறையிலும் அழகுமிகு லாம்ப் ஷேடுகள்... எல்லாம் உங்கள் கற்பனா சக்தியுடன் கேமல் க்ரைலின் கலர்கள் இணைந்ததின் பயன்.

6 சுலபமான பாடங்களில், துணிகளில் க்ரைலின் வர்ணம் தீட்டும் கலையைக் கற்றுக்கொள்ளுங்கள்—க்ரைலின் கரெஸ்பாண்டென்ஸ் ஸ்கூலில் சேருங்கள்.



இந்தத் திட்டத்தில் இலவச டிசைன் புத்தகமும், இலவச குறிப்பு புத்தகமும் கிடைக்கும். பாடத்திட்டம் முடிவடைந்ததும் திறமைச் சான்றிதழ் அளிக்கப்படும்.

கட்டணம்: ரூ. 20/-
முழுத்திட்டத்திற்கும்.



**கேமல்**
**க்ரைலின்**



க்ரைலின்
கரெஸ்பாண்டென்ஸ்
ஸ்கூல்,
கேம்லின் ப்ரை. லிட்.,
ஆர்ட் மெட்டீரியல்
டிவிஷன்,
ஜே.பி. நகர்,
பம்பாய் 59 ஏஎஸ்,
இந்தியா.



PRATIBHA 207-24 TAM



சென்னை; திரு கே. சொக்கலிங்கம் I. A. S. அவர்கள் குமாரத்தி செல்வி **மணிமேகலை** B. Sc.க்கும், டாக்டர் **கேதார்நாத்** M. B. B. S.க்கும் அண்மையில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது. திருமணத்துக்கு நண்பர்களும், உறவினர்களும், நகரப்பிரமுகர்களும் பலரும் வருகை தந்து மணமக்களை வாழ்த்திச் சென்றனர்.

வாழ்க மணமக்கள்!

---

# மூல நோயை

முற்றவிடாமல்
நம்பிக்கையான

## ஹெடன்ஸா

உபயோகித்து
நிவாரணம்
அடையுங்கள்;
—ரண
சிகிச்சையையும்
தடுங்கள்

கொண்டிருந்த கூடத்தை ஒட்டிய அறையில் மாப்பிள்ளைப் பையன் அப்பா பேசிக்கொண்டிருந்ததையெல்லாம் கேட்டுக் கொண்டிருப்பதை சாஸ்திரிகள் கவனித்தார். கல்லூரிக்குப் போய்ப் படித்து, அப்பாவுக்கு எதிராக எத்தனையோ காரியங்களைச் செய்யப் பழகிக் கொண்டிருக்கும் பையன், இதிலே மாத்திரம் பித்ரு வாக்கிய பரிபாலனம் செய்யும் பிள்ளையாக இருப்பதை நினைத்துப் பெருமூச்சு விட்டுக் கொண்டே வெளியேறினார் சாஸ்திரிகள்.

ஆவணி இருபத்தொன்பது. வெள்ளிக்கிழமை. பத்திரிகை ஆசிரியர் சந்தானத்தின் வீட்டுக் கல்யாணம் முதல் நாள் முடிந்து, சம்பந்தி வீட்டுக்காரர்கள் ஊருக்குப் புறப்பட்டுக் கொண்டிருந்தார்கள். அந்த மூன்று நாட்களாக ராமய்யரும் சாஸ்திரிகளும் எத்தனையோ தடவை சந்தித்துக் கொண்டும் அதிகமாகப் பேசிக் கொள்ளவில்லை.

பிள்ளை வீட்டுக்காரர்கள் கிளம்பிக்கொண்டிருந்தபோது கட்டுச்சாதக் கூடைகளைக் கொண்டு வந்து வைப்பதை மேற்பார்வை பார்த்துக் கொண்டிருந்தார் ராமய்யர். சாஸ்திரிகளும் அங்கே நின்று கொண்டிருந்தார்.

அப்போது வந்த தபால்காரர் முதல் நாள் வந்து சேர வேண்டிய வாழ்த்துச் செய்திக் கடிதங்களைக் கொடுத்து விட்டுப் போனார். அதை வாங்கிப் பார்த்துக்கொண்டிருந்த கல்யாண வீட்டுக்காரர் ஒரு கடிதத்தின் மேல் "ராமய்யர் ஹெரட் குக்" என்று படித்துவிட்டு "ராமய்யர் யார்?" என்று விசாரித்தார்.

"நான்தான்... எனக்கு யார் இந்த விலாசத்துக்குக் கடிதம் எழுதியிருக்கிறது? ஒரு வேளை நேற்றைக்குச் சாப்பிட்டுவிட்டுச் சமையலைப் புகழ்ந்து எழுதிய பாராட்டுக் கடிதமோ?" என்று நினைத்துக் கொண்டே கடிதத்தை வாங்கிக் கொண்டார் ராமய்யர். வெள்ளெழுத்துக் கண்ணாடி இல்லாமல் அவரால் படிக்க முடியாது. எதிரில் நின்ற சாஸ்திரிகளிடம் கடிதத்தைக் கொடுத்துப் படிக்கச் சொன்னார். "வேறே எங்கேயாவது கல்யாணத்துக்கு என்னை 'புக்' செய்வதற்குக் கேட்டிருப்பார்கள்... படியுங்கோ..."

சாஸ்திரிகள் ஒரு தடவை கனைத்துக் கொண்டு படிக்க ஆரம்பித்தார்.

"அப்பா அவர்களுக்கு சங்கரன் அநேக நமஸ்காரம்..."

ராமய்யர் திகைத்தார். "யார் சங்கரனு? எங்கேயிருந்து எழுதியிருக்கிறான்? திருச்சியிலேருந்தா? முந்தாநாள் மத்தியானம் நான் இங்கே கிளம்பி வரும்போது வீட்டிலேதானே இருந்தான்?... படியுங்கோ..."

சாஸ்திரிகள் மறுபடியும் படிக்க ஆரம்பித்தார்.

"நாங்கள்...அதாவது நானும் சௌ. ராதையும் இங்கே சௌக்கியமாக வந்து சேர்ந்தோம்..."

இப்போது சாஸ்திரிகள் திகைத்தார். "ராதையா...? முந்தாநாள் நான் இங்கே கிளம்பி வரபோது அவள் வீட்டிலே இருந்தாளே? அவள் எப்படித் திருச்சிக்குப் போனாள்?"

## மரண நேரம்!

பண்டைக் காலத்தில் ஒவ்வொருவருக்கும் தமக்கு எப்போது மரணம் சம்பவிக்கும் என்பது நன்றாகத் தெரிந்திருந்தது. இதனால் ஏற்பட்ட தொல்லைகள் அனந்தம்.

அந்த விவசாயி தன் நிலங்களை நன்கு பயிரிட்டு வளர்த்தான், அவனுக்குத் தன் முடிவுக் காலம் இலையுதிர்க் காலத்தில் வருகிறது என்பது தெரிந்துவிட்டது.

முந்தின வஸந்த காலத்தில் நடப்பட்ட பயிர்கள் கதிர் முற்றி வளர்ந்து செழிப்போடு திகழ்ந்தன. தான் வளர்த்த பயிரைக் காக்க வேண்டாமா? அதற்குச் சரியான வேலி போட வேண்டாமா?

கடவுள் தேவதை ஒன்றைப் பூமிக்கு அனுப்பினார், மக்கள் எப்படி வாழ்கிறார்கள் என்று அறிந்து வர.

தேவதை இந்த விவசாயியிடம் வந்து, "நீ என்ன செய்து கொண்டிருக்கிறாய்?" என்று கேட்டது.

"மரணம் நெருங்கும் பொழுது யாருக்குத்தான் என்ன செய்யத் தோன்றும்? நான் எனது மரண நேரத்தை எதிர்பார்த்துக் காத்திருக்கிறேன்!" என்றான் விவசாயி.

"உன்னுடைய பயிரைக் காக்க எந்த வேலியையும் அமைக்கவில்லையே?" என்று கேட்டது தேவதை.

"நான் பயிரிட்டு வளர்த்து விட்டேன். என் சந்ததியினர் வேலிகளை அமைத்துக் கொள்ளட்டுமே? நான் இலையுதிர் காலத்தில் மரித்து விடுவேனே!" என்றான் விவசாயி.

தேவதை திரும்பிச் சென்று கடவுளிடம் நடந்ததைக் கூறியது. அந்த நாளிலிருந்து மனிதர்கள் தமக்கு மரணம் எப்போது சம்பவிக்கும் என்பதை அறிய முடியாதவர்களானார்கள்.

(ஐரிஷ் கதை) -- பி.எஸ்.எம்.

---

"என்னையா இது? சங்கரனும் ராதையுமா? திருச்சிக்கா... சீக்கிரம் படியுங்கோ... உம்.." என்று ராமய்யர் வெடித்தார்.

நெஞ்சை அடைக்க, குரல் நடுங்க சாஸ்திரிகள் படித்தார்.

"நானும் சௌ. ராதையும் இங்கே சௌக்கியமாக வந்து சேர்ந்தோம். ஆனந்தமாகக் காவேரியிலே ஸ்நானம் செய்து, புது வேஷ்டி புடவையுடன் சுவாமி தரிசனம் செய்து கொண்டு அந்தத் தெய்வ சந்நிதியிலேயே அவருடைய அநுக்கிரகத்தை முன்னிட்டுக்கொண்டு மாலை மாற்றிக் கொண்டு கல்யாணம்..."

சாஸ்திரிகள் கையிலிருந்து கடிதம் நழுவிக் கீழே விழுந்தது. ராமய்யர் அதை எடுத்துக் கொடுத்து "உம்... படியும்..." என்றார்.

"மாலை மாற்றிக் கொண்டு கல்யாணம் பண்ணிக் கொண்டோம். மாங்கல்ய தாரணமும் நடந்து முடிந்தது. இது செல்லாது என்று நீங்கள் சொல்லக் கூடும் என்பதால், ரிஜிஸ்திரார் முன்னிலையில் ரிஜிஸ்தர் செய்யவும் ஏற்பாடுகள் செய்திருக்கிறோம்...

"ராதையின் அப்பா ஆயிரம் ரூபாய் 'ரௌண்ட் சம்'மாகச் சேர்த்து உங்கள் கையில் கொடுத்ததும் அதையே காரில் வைத்து மாப்பிள்ளை அழைத்து அதற்கு உங்கள் ஆசை தீரக் கல்யாணம் செய்து வையுங்கள்—சங்கரன்."




சட்டமன்றத்தில் பினாமி பஸ் உடைமைகள் பற்றி டாக்டர் ஹண்டே பிரச்னை எழுப்பிய போது தி. மு. க. உறுப்பினர்களும் மந்திரிகளும் அவரைப் பேச விடாது இடைமறித்து, சூடான வாதப் பிரதிவாதங்களினால் முக்கியமான பிரச்னையைப் பின்னுக்குத் தள்ளி அது பற்றி முறையாக விவாதிக்க முடியாமல் தடை உண்டாக்கியது வருந்தத்தக்கதாகும். குற்றச்சாட்டுகளையோ ஊழல்களையோ எதிர்க் கட்சி உறுப்பினர்கள் கூறுகிறபோது அதனைக் கேட்டு விளக்கம் தருகிற பொறுமை அமைச்சர்களுக்கு வேண்டும்.

தேவராயபுரம்,
20–7–71 தே. வி. தேவராக

தமிழகத்தில் பிச்சைக்காரர்கள் மறுவாழ்வு நிதி என ஆரம்பித்துப் பொதுமக்களிடமும் நிறுவனங்களிடமும் நிதி சேர்க்கிறார்கள். 50 பைசா கார்டுகள் விற்பதும் தெரிந்ததே. அதைப் பள்ளியில் படிக்கும் குழந்தைகளிடம் கட்டாயமாக விற்கிறார்கள். இப்போது பள்ளி திறந்து நோட்டுகள், புத்தகங்கள், வாங்கப்படுகின்றன. அத்துடன் இது வேறு. ஒரு குடும்பத்தில் ஐந்து பேர் என்றால் இரண்டரை ரூபாய் ஆயிற்று. இதற்கு நோட்டுகள் வாங்கலாமே. அந்தக் கார்டுகளில் விற்பனை எண்ணிக்கையை நிர்ணயிக்கக் கூடிய வரிசை எண் இல்லை. பெருந் தலைவர்களான காந்தி, நேரு, சாஸ்திரி, ராஜாஜி, அண்ணா ஆகியோரின் வண்ணப் படங்களைக் கொண்ட கார்டுகளாக அச்சிட்டுக் கொடுத்தாலாவது வாங்கலாம். திருப்தியாக இருக்கும்.

கடலூர்
20–7–71 எஸ். ராஜசேகரன்

★ இக்குறிப்பிட்ட கடிதம் ரூ. 15/- பரிசு பெறுகிறது

★ எங்களது பகுதியில் ஏழை விவசாயிகள் தங்களுக்குத் தேவையான உரங்களைக் கடனாகப் பெறுதல் பொருட்டு ஊராட்சி ஒன்றிய அலுவலகத்தினை நாடுகிறார்கள். மூன்று ஏக்கர் நிலம் (குத்தகை) செய்யும் ஒருவர் ரூபாய் முந்நூறுக்குக் கடன் மனு செய்கிறார் என்று வைத்துக் கொள்வோம். அங்கோ ஏக்கருக்கு ரூ. 30 பெறுமான ''கருணா'' விதையினைத் தந்துவிட்டு மீதிக்கு உரம் தருகிறார்கள். எனவே மூன்று ஏக்கர் சாகுபடி செய்யும் ஒரு விவசாயி ரூ. 210 பெறுமானமுள்ள உரத்தினைத்தான் பெற முடிகிறது. அதனால் அவ்விவசாயி ரூ. 300 பெறுமானமுள்ள உரத்தினைப் பெறுதற்கு ரூ. 390க்குக் கடன் மனு செய்ய வேண்டியுள்ளது. இக்கடன் பளு முழுதும் ஏழை விவசாயியின் தலையில்தானே விழுகிறது? ''கருணா'' விதையினை விவசாயிக்குத் தேவையான அளவுக்குக் குறைத்து, மீதிப் பணத்துக்குப் பூச்சி கொல்லி மருந்து போன்றவற்றைக் கொடுத்தாலாவது அவர்கள் பயனடைய வழியுண்டு. ''கருணா'' என்னும் இப்புதிய ரக விதை இப்பகுதிக்குப் புதியதாகும். எனவே அதனைப் பயிரிடும் எவரும் மூன்று ஏக்கரில் துணிந்து பயிரிட மாட்டார். ஏதோ அரை அல்லது ஒரு ஏக்கரில்தான் துணிந்து பயிரிட்டுச் சோதனை செய்வர். வெற்றி கிட்டின் மறு சாகுபடியில் விரும்பிப் பயிரிடுவர். அவர்கள் தருகின்ற பூச்சி கொல்லி மருந்து கலந்த 90 ரூபாய்க்கான ''கருணா'' விதையினை இவ்விவசாயிகள் வைத்துக் கொண்டு என்ன செய்வர்? முன்னமேயே ஏதோ ஒருவிதை (ஏ.டி.டி. அல்லது ஐ.ஆர்.8) தெளித்த பின்னர் கடன் மனுச் செய்யும் விவசாயிகள் ''கருணா''வை வைத்துக் கொண்டு பெறும் பயன் யாது? சரி. அக்கருணா விதையினைக் கிட்டிய விலைக்கு மற்றவர்களுக்கு விற்றுவிடலாம் என்றாலும் மற்றோரும் அந்நிலையில்தானே இருக்கின்றனர்!

''கருணா'' நெல்லின் சாகுபடியின்போது டை - அமோனியம் பாஸ்பேட், சல்பேட், யூரியா போன்ற மூன்று வித உரங்களை இட வேண்டும் எனச் சிபாரிசு செய்துவிட்டு, தருவதோ இரண்டு வித உரங்கள்தாம். மற்றொன்றினை விவசாயிகள் எங்கு சென்று பெறுவர்? கொடுக்கிற உரமும் எடையில் குறைந்து உள்ளன; சாக்குப் பைகள் கிழிந்து இருக்கின்றன.. தரத்தில் எப்படியோ? — இன்னும் சின்னாள் கழித்துத்தான் தெரியும்.

ஏழை விவசாயிகளுக்காகப் பாடுபடுகிறோம் என்று பாடிக் கொண்டிருப்பவர்கள் அவர்களை இந்தப் பாடுபடுத்தவேண்டாம்.

17–7–71 கவிதாச சொல்லழகன்
கொடியாலம் வசந்தன்

தமிழக அரசு, அரசாங்க விளம்பரங்களை இனி தான் நடத்தி வரும் 'தமிழரசு' பத்திரிகையிலேயே வெளியிடுவதென முடிவு செய்திருக்கிறதாம். தான் விரும்பாத பத்திரிகைகளுக்கெல்லாம் விளம்பரத்துக்குப் பணம் தர வேண்டியிருப்பதைத் தவிர்ப்பதற்காகவா இந்த ஏற்பாடு? எத்தனையோ விளம்பர உத்திகளைப் பயன்படுத்தியும், ''தமிழரசு'' பத்திரிகை பொதுமக்களிடத்தில் சரியான இடத்தைப் பிடிக்கவில்லை. இது ஓர் அரசு இதழல்ல; கட்சி இதழ் என்று எண்ணுமளவுக்கு அது வந்துவிட்டது. அரசாங்க விளம்பரங்களை மற்றப் பத்திரிகைகளில் வெளியிடாவிட்டால் அரசு என்ன செய்து கொண்டிருக்கிறது என்பது எப்படித் தெரியும்? எத்தனையோ துறைகளில் அவசியமற்ற செலவுகளைச் செய்யும் போது சிக்கன நடவடிக்கை என்று சொல்லிக் கொண்டு பத்திரிகைகளுக்கு விளம்பரங்களை நிறுத்துவது என்பது சரியே அல்ல.

காங்கயம்,
21–7–71 ப. தண்டபாணி

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor: T. Sadasivam

# பளிச்சிடும் மேன்மையைப் பாருங்கள் கண்ணார

# ஹிந்தாலியம்®

## உங்கள் இல்லத்திற்கு வழங்கும் நல்லொளி

வெள்ளியின் பளபளப்பு,
தோற்றத்திலே மதிப்பு,
எளிமையின் வனப்பு...
இதுதான் நீங்கள் பெறுவது,
ஹிந்தாலியம் பாத்திரங்களை
வாங்கும்போது.

ஹிந்தாலியம்
பாத்திரங்களிலே
சமைப்பதும் இன்பம்.
சாப்பிடுவதும்
இன்பம்.

ஹிந்துஸ்தான்
அலுமினியம்
கார்ப்பன் லிட்.




வெள்ளி
போல்
தோற்றம
ளிக்கிறது

எஃகு
போன்று
நீடித்து
ழைப்பது

ஹிந்தால்கோ விலை
ஸ்டெயின்லஸ் ஸ்டீல்
விலையில் மூன்றில்
ஒரு பாகம்தான்

Sobhagya HAC-370 TM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon